# FOREWORD

WITHIN the last few years, there has been a great awakening of interest in India in economic questions, but it cannot be said that it has resulted in any corresponding measure of understanding of the problems affecting the public, The academic economist, engrossed in his researches or closeted in his class-room, has taken little pains to bring the knowledge that he has acquired to the market place. And yet the task of educating the public on important economic issues, and of presenting impartially the pros and cons of different policies which may be proposed is one which cannot be neglected, if the true end of economic science is understood. A serious handicap in the way of popularizing economics has been, and continues to be, the difficulty of expressing in the vernaculars of the country the theories and ideas of the economists. Any efforts therefore directed towards popularizing economic science through the medium of the vernacular are opportune and must be welcomed.

It is therefore with real pleasure that I venture to commend to the public this little book written by my friend, Mr. S. Ramachandran, in easy and readable Tamil. The book is a powerful plea for a more rapid industrialization of the country and for

the development of some of the industries for which India has not only natural advantages, but which are essential to her well-being. The author has availed himself of up-to-date and accurate data to illustrate his points, and has drawn freely from Sir M. Visweswaraya's book both for facts and figures. Although in one or two places, as for instance in his discussion of the relative value of exporting raw cotton and importing cloth, Mr. Ramachandran's economic argument may not be accepted by all, the book as a whole represents a successful attempt at presenting the case for united action to promote the well-being of the people of India through rapid industrialization. I have no doubt that the book will go some way in meeting the demand for the popularizing of economic knowledge.

SENATE HOUSE,
TRIPLICANE.
*5th September 1935.*

P. S. LOKANATHAN,
*Professor of Economics,*
*University of Madras.*

உ

ஸ்ரீராமஜெயம்

# முன்னுரை

## (முதற்பதிப்பு)

பசிப்பிணியே பல்வகைப் பிணிகளுள்ளும் தலைமைப்பிணியாம். இதனால் மாள்பவர் பல்லாயிரவ ராவர். இப்பிணியைத் தீர்க்க வல்லவரே உண்மை மருத்துவராம். இதை நோக்கியே மணிமேகலையாரும் 'உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே' என்றார். ஆகவே, உண்டியையும் உண்டி யளித்தற் குரிய கருவியையும் உதவுகின்றோரே பெரிதும் மதிக்கத் தக்கவராவர். இத்தகைய உதவியைப் பெருக்கிக் கையாள்வதற்குக் கூடாமையின் காரணம் கொடிய வறுமையே யாகும். இதனாலேயே ஔவையம்மையும் 'கொடிது கொடிது வறுமை கொடிது' என வருந்தினர். இவ்வறுமை நிலைத்திருப்பதற்கு நிலைக்களனாயிருப்பது 'தொழில் இல்லாமையாம்.' இத்தொழில் இல்லாமையாகிய காம்பைத் திருத்திப் பல் வளமளித்தற் குரியது 'கைத்தொழில் அபிவிருத்தியே' யாம்.

இக்காலத்தில் உலகில் எங்கணும் பசிப்பிணியே பரவியுள்ளது. இதற்கு மூலகாரணங்களாகிய 'தொழில் இல்லாமை'யையும், 'கைத்தொழில் அபிவிருத்தியின்மை' யையும் போக்குதலே பலபெரியாருடைய நோக்கமும்

உழைப்புமா யுள்ளன. இஃதிவ்வாறாக, செல்வம், கல்வி, அறிவு நாகரிகங்களில் தலை சிறந்து, ஓங்கி வளம்பெற்றிருந்த நம் இந்தியாவிலோ கடந்த பல நூற்றாண்டுகளில் ஏற்பட்ட பல படையெடுப்பு, கொள்ளை, ராஜ்ய மாறுதல்கள் முதலிய பல்வகைக் காரணங்களால், இந்நாட்டுக் கைத்தொழில் வளம் குன்றி, உத்தியோக வேட்டை மோகத்தினால் பரிக்ஷையில் தேர்ந்தோர் தொகை மிகுதிப்பட்டதால் 'தொழில் இல்லாமை' மிகுந்து மக்கள் பசிப்பிணியால் பரதவித்து மடிகின்றனர்.

பிணி தீர்க்கும் மருத்துவருள், நாட்டு நிலையறிந்து மக்களின் தேக நிலைதெரிந்து, நோய்க் காரணம் உணர்ந்து, தக்கவாறு மருந்து கொடுத்துப் பிணி தீர்க்கக் கூடிய சிறந்த நாட்டுவைத்தியனே வேண்டற்பாலன். இவ்வித அனுபவம் வாய்ந்தவர் ஒரு சிலரே. இது போலவே, இந்நாட்டுப் பசிப்பிணி தீர்க்கப் புகுவாரும், இந்நாட்டவரே யாகி, நல்லனுபவம் வாய்ந்த பெரியோரேயாவர். அவர்களுள், ஸர் எம். விஸ்வேச்வரய்யா அவர்களும் ஒரு சிறந்த பசிப்பிணி மருத்துவரென்று கூறத்தகுந்தவர்.

தொழில் இல்லாமையைப் போக்கப் பொது ஜனங்களும் அரசாங்கத்தாரும் நன் முயற்சி எடுத்துக் கொண்டுள்ள தற்காலத்தில், இப்பெரியார் தம் பல முக்கிய உபந்நியாசங்களுள் இரண்டு அரிய உபந்நியாசங்களின் வாயிலாக இவ்விஷயத்தில் நம் நாட்டிற்குப் பேருபகாரம் புரிந்துள்ளார். அவைகளுள், முன்னது

'தொழில் இல்லாமை'யைக் குறித்துப் பெங்களூர் பல்கலைச் சங்கத்தார் (University Union, Bangalore) முன் 1932-ம் ஆண்டிலும், பின்னது, 'இந்தியக் கைத்தொழில் அபிவிருத்தி'யைக் குறித்துப் பெங்களூரில் மைசூர் வர்த்தக சங்கத்தார் (Mysore Chamber of Commerce) முன் 1933-ம் ஆண்டிலும் ஆங்கிலத்தில் நிகழ்த்தப் பெற்றன. முதலாவது தொழில் இல்லாமைக்கு உரிய காரணங்களைக் காட்டி விளக்குவதுடன், நிவர்த்தி முறைகளையும் ஒருவாறு காண்பிக்கின்றது. இரண்டாவது முன் குறிப்பிட்ட நிவர்த்தி முறையை நன்கு விரித்துத் தொழில் இல்லாமையைத் தீர்ப்பதற்குக் கைத்தொழில் அபிவிருத்தியே தக்க ஸாதனம் என்பதை ஸித்தாந்தம் செய்கிறது. 'முயற்சியுடையார் இகழ்ச்சி அடையார்'' "முயற்சி திருவினையாக்கும்", "முயற்றின்மை இன்மை புகுத்தி விடும்'' என்பது அப்பெரியோர் கோட்பாடாகும் ஆகவே நம் குறையை நாமே போக்கிக்கொள்ள முற்பட்டு வழி தேடவேண்டுவது ஒருதலை.

மேற்கூறிய பெரியாரும் அவரைப்போன்ற மற்றப் பெரியாரும் செய்துள்ள பயன் றரும் உபந்நியாசங்கள் அனைத்தும் ஆங்கில மொழியிலேயே இருத்தலின், தமிழ் மட்டுமறிந்த பெரும்பாலார்க்கும் உபயோகப்படுத்தும் நோக்கத்துடன் இச்சிறு நூல் என்னால் எழுதப் பட்டது. இது ஸர் எம். விஸ்வேச்வரய்யா அவர்களுடைய அரிய பெரிய உபந்நியாசங்களாகிய இவ்விரு உபதேசமொழிகளை அடிப்படையாகக் கொண்டும்,

அவ்வப்பொழுது நான் படித்து வருவனவற்றுள் குறித்திருப்பவற்றைச் சேர்த்தும் யாவருக்கும் விளங்கும்படி தமிழில் என்னால் ஒருவாறு எழுதப்பட்டது. தம் உபந்நியாசங்களைத் தழுவி எழுதுமாறு அன்புகூர்ந்து ஆதரித்த அப்பெரியார்க்கு மன மொழி மெய்களால் வந்தனஞ் செலுத்துகின்றேன். அன்றியும் இதற்குத் தம் மனமுவந்து மதிப்புரை எழுதி யுதவிய மதராஸ் யூனிவர்ஸிடி எகனமிக்ஸ் புரோபஸராகிய (Dr. P. S. லோகநாதன், M.A., D.Sc., அவர்களுக்கும் அவ்வாறே வந்தன மளிக்கின்றேன்.

நம் நாட்டின் நலத்தினையும் முன்னேற்றத்தினையும் உத்தேசித்துப் பல விஞ்ஞான சாஸ்திர நூல்கள் இயற்றப்படவேண்டும் என்னும் பேரவாவுடைய பெரியாரும், கும்பகோணம் காலேஜில் ரஸாயன போதகாசிரியருமாகிய பிரம்மஸ்ரீ கே. ஸி. வீரராகவய்யர், M.A.L.T., அவர்கள் இதையும், இதுபோன்றவற்றையும் எழுதுமாறு அன்புகூர்ந்து அவ்வப்போது ஊக்கி வந்ததற்காக அவருக்கும், எடுத்த காரியத்தில் குன்றா ஊக்கம் கொடுத்து வந்த திருச்சி நாஷனல் காலேஜ் பிரின்ஸிபாலாகிய பிரம்மஸ்ரீ வி. சாரநாதய்யங்கார், M. A., அவர்களுக்கும் நான் பெரிதும் கடமைப்பட்டுள்ளேன். இதையெழுதி வருங்காலத்தில் வேண்டிய உதவியளித்தவரும் பெங்களூர் R. B. A. N. M. ஹைஸ்கூல் தமிழ்ப் பண்டிதருமாகிய பிரம்மஸ்ரீ V. B. சுப்ரமண்ய சர்மா அவர்களுக்கும், என்னுடன் பெங்களூர் St. Joseph's

College-ல் தமிழ்ப் பண்டிதராயுள்ள ஸ்ரீமான் தோ. வே. செங்கல்வராய முதலியார் அவர்களுக்கும், இந்நூலைத் தக்கவாறு அச்சிட்டுதவிய மெஸ்ஸர்ஸ் ஸ்ரீநிவாச வரதாச்சாரி கம்பெனியாருக்கும் நன்றியுள்ள வணுகின்றேன்.

இந்நூல் தமிழ் உலகத்தாருக்கு ஒருவாறு பயனளிக்கு மென்னும் நோக்கத்தோடு வெளியிடுதலானேன். இது அவ்வாறாயின் எனக்கு மிகவும் மகிழ்ச்சி தருவதாகும். எல்லாம் வல்ல இறைவன் நம் நாட்டிற்கு அருள் புரிவாராக!

St. Joseph's College,
Bangalore,
2-11-35.

எஸ். இராமச்சந்திரன்.

உ

ஸ்ரீராமஜெயம்

# முன்னுரை

## (இரண்டாம் பதிப்பு)

அமிழ்தினும் இனிய நம் தமிழ் மொழியினும், இச்சிறு நூலின் இன்றியமையாமையை, நன்குணர்ந்து சென்னைப் பல்கலைக் கழகத்துத் தமிழ்க்கலை அவையத்தார் (Board of Studies, Tamil, University of Madras,) இதனை 1941-ம் ஆண்டு இன்டர்மீடியட் பரீக்ஷைக்குப் பாடமாக அமைத்த அருமையுடைமைக்

காக, நான் அவர்களுக்குப் பெரிதும் கடமைப்பட்டுள்ளேன். இதனைச் சிறு மாறுதல்களுடனும், சிலகருத்துப் பெருக்குடனும் திருத்தி அமைக்கும் எண்ணமுள்ளேனாயினும், பரீக்ஷைப்பாடமாக அமைந்துள்ள முற்பதிப்புடன் ஒரு சிறு மாறுதலைக்கண்டு மாணவர் இடர்ப்பட நேருமென அஞ்சி விடுத்தேன். எல்லாம் வல்ல இறைவன் அருளால் மூன்று முறை பதிக்க நேருமாயின், அப்போது சில சீர்திருத்தங்களுடன் இதனை வெளியிடுவன்.

இப்பதிப்பினை பதிப்பிக்குங்கால், இதற்கு வேண்டுமுதவியை மனமுவந்து புரிந்துவந்த திருவாளர். தோ. வே. செங்கல்வராய முதலியார் அவர்களுக்கும், இதனைக் காலந்தாழ்த்தாது, கூடிய விரைவில் அச்சிட்டுதவிய ஸ்ரீ ராமகிருஷ்ண ப்ரிண்டிங் ஒர்க்ஸ் அச்சுக்கூடத் தலைவருக்கும், என் மனமார்ந்த நன்றி செலுத்துகின்றனன்.

ST. JOSEPH'S COLLEGE,
Bangalore,
20th August, 1939.

எஸ். ராமச்சந்திரன்.

## பொருளடக்கம்

# இந்தியக் கைத்தொழில் முன்னேற்றம்.

## I- கைத்தொழில் முன்னேற்றத்தின் அவசியம்.

முன்னொருகால், ஸர்வகலாசாலைகளில் உயர்தரக் கல்வி பயின்று பட்டம் பெற்ற மாணவர்கள் அரசாங்கக் காரியாலயங்களிலும் இதர கைத்தொழிற் சாலைகளிலும் தக்க சம்பளத்துக்கு வேலைகளில் அமர்ந்து மேன்மையுடன் வாழ்ந்து வந்தனர். இப்பொழுதோ, அவ்விதம் பட்டம் பெற்றவர்கள் அதே இடங்களில் ஏவற்பணி செய்வதற்காவது இடங் கிடைத்தால் போதுமென்று ஊதியமின்றி வேலை செய்கின்றனர். இந்த வேலைகூட அகப்படாமல் தவிக்கும் பட்டதாரிகள் நம் தேசத்தில் பல ஆயிரவர் இருக்கின்றனர். உலகமெங்கும் இவ்விதம் தொழில் இல்லாமல் தவிப்பவர்களின் எண்ணிக்கை பல லக்ஷங்களாகும். ஆதலால் நம் தேசத்தைத் தற்காலம் பீடித்திருக்கும் தொழில் இல்லாமையைத் தீர்க்கவேண்டுமாயின், இதர தேசங்களில் இந்நிலையை நிவர்த்திக்கக் கையாளப்படும் முறைகளைக் கவனித்து, அம்முறைகளை நம் தேசத்துக்குத் தக்கவாறு மாற்றி அனுசரிப்பது அவசியமாகும். இவ்விதம் செய்வதற்கு அரசாங்கத்தாரின் உதவியும் பொது ஜனங்களின் ஊக்கமும் வேண்

தொழிலின்மை-

டும். இருவரும் ஒத்து உழைத்தா லல்லாமல் இப்பொழுது ஏற்பட்டிருக்கும் நெருக்கடியான நிலையை நிவர்த்திப்பது அசாத்தியமாகும்.

தொழில் இன்மைக்குக் காரணம்.

சென்ற ஐரோப்பிய மகா யுத்தத்திற்குப்பின் ஏற்பட்ட ராஜீய பொருளாதார நிலையே தற்காலத்திய தொழில் இல்லாமைக்குக் காரணமென்று பொருளாதார நிபுணர்கள் கூறுகின்றனர். இதே காரணம் நம் தேசத்திற்கும் ஒருவாறு பொருந்துமாயினும், இதர தேசங்களில் காணக்கூடாத சில விசேஷ காரணங்கள் நம் நாட்டில் காணப்படுகின்றன. நம் தேசத்தின் தற்கால நிலையைக் கண்டு மனம் வருந்தாதார் ஒருவரும் இருக்க மாட்டார். தொழிலின்றி, புஷ்டியான உணவுப் பொருள்கள் வாங்கி உண்பதற்குத் திரவியமின்றிப் பசியாலும் நோயாலும் வருந்தி, சிறு வயதிலேயே நம் தேசத்தில் பொதுவாக ஜனங்கள் இறந்து விடுகின்றனர். நம் தேசத்தில் விவசாயமே ஒரு பெரிய கைத்தொழிலாகும்; விவசாயத்திலேயே போதிய அளவுக்கு மேற்பட்டு ஜனங்கள் உழைக்கின்றனர். அகவிலை ஓங்கி நின்ற காலத்தில் தயாரிக்கப்பட்ட மாண்டேகு செம்ஸ்போர்டு (Montagu-Chelmsford Report) யதாஸ்திலேயே, விவசாயம் தக்க வருமானம் அளிப்பதில்லை யென்று கூறியிருக்கும்போது, தற்கால மலிவான விலைகளை உத்தேசித்துப் பார்த்தால், விவசாயிகளுக்கு நஷ்டந்தான் ஏற்படுமென்பது நிதர்சனம். கீழே குறிப்பிட்ட அட்டவணைகளிலிருந்து அயல்

தேசங்களில் ஜனங்கள் மேம்பாடான வாழ்க்கை நடத்துவதற்குக் காரணம் நன்கு விளங்கும்.

நம் தேசத்தில் மிகப்பலர் விவசாயத்தில் ஈடுபட்டுளர்.

அட்டவணை I.

அவ்வத்தேச மொத்த ஜனத்தொகையில் விவசாயத்தில் ஈடுபட்டிருப்பவர்களின் சத விகிதம்.

| தேசங்கள் | | % சத விகிதம் |
|---|---|---|
| பிரிட்டன் | ... | 10 |
| அமெரிக்க ஐக்கிய மாகாணங்கள் | ... | 22 |
| ஜெர்மனி | ... | 30·5 |
| பிரான்ஸ் | ... | 38·3 |
| கனடா | ... | 35·0 |
| இந்தியா | ... | 73·0 |

அட்டவணை II.

அவ்வத்தேச மொத்த ஜனத்தொகையில் கைத்தொழில் களில் ஈடுபட்டிருப்பவர்களின் சத விகிதம்.

| தேசங்கள் | | % சத விகிதம் |
|---|---|---|
| பிரிட்டன் | ... | 39·7 |
| அமெரிக்க ஐக்கிய மாகாணங்கள் | .... | 29·3 |
| ஜெர்மனி | ... | 38·1 |
| பிரான்ஸ் | ... | 31·2 |
| கனடா | ... | 26·9 |
| இந்தியா | ... | 4·0 |

## அட்டவணை III.

சில தேசங்களில் ஒருவனுக்குக் கிடைக்கும்சராசரி வருஷ வருமானம் (Annual per capita income.)

| தேசங்கள் | ஒருவனுடைய சராசரி வருஷ வருமானம் (ரூபாய்கள்) | | |
|---|---|---|---|
| | கைத்தொழில் | விவசாயம். | மொத்தம். |
| பிரிட்டன் ... | 808 | 80 | 888 |
| அமெரிக்க ஐக்கிய மாகாணங்கள் .... | 1,300 | 286 | 1,586 |
| கனடா .... | 1,047 | 464 | 1,511 |
| ஸ்வீடன் ... | 384 | 129 | 513 |
| ஜப்பான் .... | 120 | 85 | 205 |
| இந்தியா ... | 13 | 67 | 80 |

இம் மூன்று அட்டவணைகளிலிருந்தும் சில விஷயங்கள் நன்கு புலப்படுகின்றன. நாகரிகமடைந்த மேல்நாடுகளில், ஜனங்கள் அதிகமாகக் கைத்தொழில்களிலேயே ஈடுபட்டிருக்கின்றனர் என்பது முதலாவது. அவர்கள் அவ்விதம் செய்வதினால் அதிக ஊதியம் பெற்று, மேம்பாடான வாழ்க்கை நடத்துகிறார்கள் என்னும் விஷயம் இரண்டாவதாகும். நம் தேசத்தில் பெரும்பாலார் விவசாயத்தையே ஆதாரமாகக் கொண்டிருக்கிறார்கள்; ஆதலால் அவர்கள் தனவந்தர்களாக இல்லாமல் வறுமையில் உழல்கிறார்கள்; இது முக்கியமாகக் கவனிக்கப் படவேண்டிய மூன்றாவது.

அயல் தேசங்களில் கைத்தொழில்களிலேயே ஜனங்கள் அதிகமாக ஈடுபட்டிருக்கின்றனர்

விஷயம். ஆதலால் நம் தேசத்தில் வறுமை நீங்கவேண்டுமாயின் கைத்தொழில்களை அபிவிருத்தி செய்து, அவைகளில் ஜனங்களை ஈடுபடச் செய்வதே தொழில் இல்லாமையை நீக்குவதற்கு முக்கியமான உபாயம்.

பிரிட்டனே முதல் முதலில் கைத்தொழில் முறைகளில் பெரிய மாறுபாடுகளை ஏற்படுத்தியதென்று சொல்லலாம். அதன் பயனைக் சென்ற நூறு வருஷங்களாக வியாபாரத்தில் அது முதன்மை ஸ்தானம் வகித்து வருகின்றது. இந்த நிலையை அடைந்ததற்குப் பல காரணங்கள் உண்டு. பிரிட்டிஷர்கள் கைத்தொழில்களில் முனைந்து, நீராவி யந்திரங்களைக் கொண்டு பல சாமான்களை யதேஷ்டமாக உற்பத்திசெய்து, தங்களுடைய சொந்தக் கப்பல்களிலேயே அயல் நாடுகளுக்குக் கொண்டுபோய் விற்று அதிக லாபம் சம்பாதித்தார்கள். இவ்விதம் செய்ததே அவர்களுடைய முன்னேற்றத்திற்குக் காரணம் ஆகும். இதை ஆராய்ந்த ஜெர்மனி, பிரான்ஸ் ஸ்வீடன், பெல்ஜியம் போன்ற மற்ற ஐரோப்பிய நாடுகளும் அவ்வழியைக் கைப்பற்றித் தற்காலத்தில் இருக்கும் நிலையை அடைந்திருக்கின்றன. இக்காலத்தில், முக்கியமான தேசங்கள் யாவும் கைத்தொழில்களின் அபிவிருத்தியிலேயே பூரணமாக ஈடுபட்டிருக்கின்றன. ஒருதேசத்தின் கைத்தொழில் நிலையே அந்த தேசத்தின் செல்வாக்கையும் ஐசுவரியத்தையும் நாகரிகத்தையும் சுட்டிக்காட்டுதற்குரிய ஒரு சிறந்த அறிகுறியாகும்.

தொழில் முறைகளில் ஏற்பட்டுள்ள மாறுபாடுகளும் பிரிட்டனும்.

உலக முழுவதிலும் இவ்வித ஊக்கமும் முயற்சியும் இருக்கும் தறுவாயில், நம் தேசம் முன்னேற்றம் அடைவதற்குவேண்டிய ஒரு வித மாறு பாடுமின்றி நாளுக்கு நாள் க்ஷீணித்து வருகின்றது. 1911 ஞ முதல் 1931 ஞ வரை ஏற்பட்டுள்ள ஜனக்கணித (Census)த்தைக் கவனித்தால், மேல் நாடுகளும் ஜப்பானும் கைத்தொழில்களிலும் வியாபாரத்திலும் முன்னேற்றம் அடைந்திருப்பதையும், நம் தேசம் அவ்விதமின்றி விவசாயத்தையே அதிகமாகப் பெருக்கியிருப்பதையும், நன்றாகத் தெரிந்து கொள்ளலாம்.

**நம் தேச நிலை.**

விவசாயம் ஒவ்வொரு தேசத்திற்கும் அவசியமே. எந்தத் தேசமும் விவசாயமன்றித் தனக்குத் தேவையான பொருள்களைத் தயாரித்துக் கொள்ளமுடியாது. ஜனங்களுக்கு உணவுப் பொருள்களும் சில கைத்தொழில்களுக்கு வேண்டிய மூலப் பொருள்களும் (raw products) விவசாயத்தினால் தான் கிடைக்கும். இவ்விதமிருந்தபோதிலும் தேச ஜனங்கள் விவசாயத்தினால்மட்டும் அதிக ஐசுவரியத்தை அடைய முடியாது. அமெரிக்க ஐக்கிய மாகாணங்களில் நம் தேசத்தைப் போலவே விவசாயத்திற்குத் தக்க வசதிகள் இருக்கின்றன. அந்த தேசத்தில் 1900 வருஷத்தைக் காட்டிலும் இப்பொழுது ஜனத்தொகை நன்கு அதிகரித்தேயிருக்கின்றது. அப்படியிருந்தபோதிலும், 1900 வருஷத்தில் எவ்வளவு பேர்கள் விவசாயத்தைக் கைக்கொண்டார்களோ அவ்வள

**விவசாயம் மிகவும் அவசியமே.**

வினரே இப்பொழுதும் ஈடுபட்டிருக்கின்றனர்; அதாவது ஜனங்களில் பெரும்பாலோர் கைத்தொழில்களிலேயே இறங்கி இருக்கின்றனரென்பது தெரியவருகிறது. மேலும், 1900 வருஷத்தில் கைத்தொழில்களிலிருந்து ஏற்பட்ட சராசரி வருமானம் விவசாயத்திலிருந்து ஏற்பட்ட வருமானத்திற்குச் சமமாக இருந்தது. ஆனால் அவ்வருஷமுதல் இதுவரை கைத்தொழில்களில் ஏற்படும் வருமானம் விவசாயத்திலிருந்து வரும் வருவாயைக்காட்டிலும் நான்கு மடங்கு அதிகரித்து இருக்கின்றது. இதுபோலவே, ஜப்பானிலும் கைத்தொழில்களிலிருந்து வரும் வருமானம் ஒன்றுக்கு ஏழு வீதம் அதிகரித்து இருக்கின்றது. 1914-ம் வருஷத்திய யுத்தத்திற்கு முன் கைத்தொழில்களின் மூலம் ஏற்பட்டுள்ள வருமானம் ஒரு பிலியன் யென்களாகும். தற்காலம் இது ஏழுபிலியன்களாகும். (யென் என்பது ஜப்பான் தேசத்து நாணயம்.)

ஆனால் கைத்தொழில்களே ஜனங்களின் பொருளாதார நிலையை அபிவிருத்தி அடையச் செய்யும்.

மேற் கூறிய இரண்டு உதாரணங்களிலிருந்து ஜனங்களின் பொருளாதார நிலையை அபிவிருத்தி செய்வதற்குக் கைத்தொழிலே முக்கியமான மார்க்கம் என்பது நிதர்சனம். முன்னேற்ற மடைந்த அயல் நாட்டார்கள் அவ்வழியைக் கைப்பற்றி மேன்மேலும் விருத்தி அடைந்திருக்கின்றனர். நம் தேசம், அவ்விதம் அபிவிருத்தி அடையாமல், பிற்போக்கான நிலையை அடைந்து, அதிக நஷ்டத்திற்கு உள்ளாயிருக்கின்றது.

## அட்டவணை IV.

### *பிரிட்டனின் ஜனத்தொகையில் பத்து வயதிற்கு மேற்பட்ட ஆண் பெண்கள் கைக்கொண்டிருக்கும் கைத்தொழில்களும் அவைகளின் சத விகிதமும்.*

ஆண்கள்.

| | பொதுக் கைத் தொழில் | விவசாயம். | போக்குவரவு (Transport) | மற்றவை | தொழில் இல்லாதவர்கள் |
|---|---|---|---|---|---|
| 1851 ..... | 51 | 24 | 5 | 8 | 12 |
| 1861 .... | 51 | 22 | 6 | 9 | 12 |
| 1871 .... | 54 | 18 | 7 | 11 | 10 |
| 1881 .... | 52 | 14 | 8 | 9 | 17 |
| 1891 .... | 52 | 12 | 9 | 9 | 18 |
| 1901 ... | 53 | 10 | 10 | 11 | 16 |
| 1911 .... | 52 | 8 | 10 | 14 | 16 |
| 1921 ... | 45 | 8 | 11 | 19 | 17 |
| 1931 ... | 42 | 7 | 11 | 21 | 19 |

பெண்கள்.

| | பொதுக் கைத் தொழில் | வீட்டுவேலை | மற்றவை | தொழில் இல்லாதவர்கள் |
|---|---|---|---|---|
| 1851 ... | 22 | 13 | 4 | 61 |
| 1861 ... | 20 | 15 | 4 | 61 |
| 1871 .... | 18 | 16 | 3 | 63 |
| 1881 ... | 16 | 15 | 3 | 66 |
| 1891 .... | 16 | 15 | 3 | 66 |
| 1901 .... | 16 | 13 | 3 | 68 |
| 1911 ... | 16½ | 12 | 4 | 67½ |
| 1921 ... | 11 | 10 | 10 | 69 |
| 1931 ... | 10 | 11 | 10 | 69 |

[1934௵ நவம்பர் 3௳ வெளிவந்த எகனாமிஸ்டு (*The Economist*) என்னும் பத்திரிகையிலிருந்து எடுக்கப்பட்டது, 820-ம் பக்கம்.]

*கைத்தொழில் அபிவிருத்தியினால் ஏற்படும் நன்மைகள்.*

இவ்வட்டவணை மேற் கூறியவற்றை ஊர்ஜிதப் படுத்துகிறது. காலக்கிரமத்தில் விவசாயத்தில் ஈடுபட்டுள்ளவர்கள் குறைந்திருப்பதையும், கைத்தொழில்களைக் கைக்கொண்டவர்கள் அதிகரித்திருப்பதையும், கவனிப்பது அவசியமாகும். ஆதலால் நம் தேசத்திலும் பழைய கைத்தொழில்களை உயிர்ப்பித்தும் புதிய கைத்தொழில்களை ஏற்படுத்தியும், கல்விக்காக ஆயிரக் கணக்கான ரூபாய்கள் செலவிட்டும் வேலையில்லாமல்

தவிக்கும் ஜனங்களுக்கு வேலையளிக்க வேண்டும். அநேக கோடி ஜனங்களுக்கு வேலையே கிடைப்பதில்லை. கைத்தொழில்கள் இல்லாவிடில், தேச மக்களுக்கு ஊக்கம் குன்றி, கெட்ட வழிகளில் மனம் பிரவர்த்திக்கும். இதைத் தடுப்பதற்கும், மற்றும் தேசிய உணர்ச்சியை ஊட்டுவதற்கும் கைத்தொழில் அபிவிருத்தியே முக்கிய சாதனமாகும்.* இம்மாறுதலின் பிரயோஜனங்களைப் பணங்கொண்டு மதிக்க முடியுமா? அரசாங்கத்தார்களுக்கும் நல்ல லாபமே. எப்படியெனில், பெருகிய வருவாய் மீது வருமான வரி விதித்து, பொக்கிஷத்தை நிரப்பிக் கொள்ளலாம்.

---

*Finally one of the most important results that may be anticipated from a development of industries in India is one that cannot be measured in terms of money. A country industrially undeveloped tends to suffer from a certain intellectual deadness. The outlets for the diversity of talents are a few. It is hardly too much to say that a certain measure of industrial life and opportunity is an essential condition for building up a vigorous national character. And with regard to India, the effect on national character is likely to be particularly beneficial ......... Having considered the advantages, and possible disadvantages, one could have no hesitation in holding that such a (industrial) development would be very much to the advantage of the country as a whole, creating new sources of wealth, encouraging the accumulation of capital, enlarging the pnblic revenues providing new profitable employment of labour, reducing the excessive dependence of the country on the unstable profits of agriculture and finally stimulating national life and national character.

(*Fiscal Commission Report* 1921-22.)

## 11. இந்தியாவின் இயற்கை வளமை.

தொழில் இல்லாமையை ஒழிப்பதற்குக் கைத்தொழில்களை ஏற்படுத்துவதே தக்க பரிகாரமாகும். ஆதலால் அவ்விதம் கைத்தொழில்களை ஏற்படுத்துவதற்குத் தக்க மூலப்பொருள்கள் நம் தேசத்தில் அகப்படுகின்றனவா என்ற கேள்வி எழக்கூடும்.

தற்காலத்தில் இருப்பது போல் இவ்வளவு அதிகமாக, நம் தேசத்தில் நம் முன்னோர்கள் விவசாயத்தையே நம்பி இல்லை. தொன்று தொட்டு, கைத்தொழில் வியாபாரத்தில் நம் தேசம் பிரசித்தி பெற்றதாகும். மேற்கே ஆப்பிரிகா, ஐரோப்பாவிலுள்ள பல நாடுகளுக்கும், மலேயா, ஜாவா, சைனு முதலிய கீழ்ப் பிரதேசங்களுக்கும், வர்த்தகர்கள் திறமை வாய்ந்த இந்திய மாலுமிகளைக்கொண்டே, பலராலும் போற்றப்பட்ட மஸ்லின்களும், இரும்பு எஃகு முதலிய மற்ற சாமான்களும், ஏற்றுமதி செய்து, அத்தேசங்களிலிருந்து ஏராளமான திரவியத்தைச் சம்பாதித்து வந்தனர். தற்காலத்தில் நம் தேசத்து ஏற்றுமதிகளையும் இறக்குமதிகளையுங் கவனித்தால், தேசத்தின் சீர்கேடான நிலையை நன்ருக அறிந்து கொள்ளலாம். கீழே ஏற்றுமதியாகும் சில சாமான்கள் குறிப்பிடப்பட்டிருக்கின்றன.

## ஏற்றுமதி அட்டவணை.

## அட்டவணை V.

### அயல் நாடுகளுக்கு ஏற்றுமதியாகும் சில முக்கிய சாமான்கள்.

Review of Certain Main Items of Foreign Trade during the Calendar Year 1933, Page 40.)

| சாமான்கள் | | பெறுமானம் லக்ஷக்கணக்கான ரூபாய்கள் |
|---|---|---|
| சணல் இயற்கை நிலை | | 10,90 |
| ,, உபயோகத்திற்கு சித்தமானது | ... | 21,44 |
| பருத்தி | .... | 25,74 |
| அரிசி | .... | 11,38 |
| தேயிலை | .... | 19,06 |
| எண்ணெய் வித்துக்கள் | | |
| நிலக்கடலை | .... | 7,78 |
| ஆளிவிதை | ... | 4,23 |
| மற்றவைகள் | .... | 2,66 |
| தோல் பதனிடாதது | .... | 4,06 |
| ,, பதனிட்டது | .... | 5,07 |
| உலோகங்களும் தாதுப் பொருள்களும் | .... | 5,33 |

## அட்டவணை VI.

### ஐந்தாவது அட்டவணையில் குறிப்பிடாத, ஏற்று மதியாகும் சில சாமான்கள்.

(Review of the Trade of India in 1931-32, page 80.)

| சாமான்கள் | பெறுமானம் ஆயிரக்கணக்கான ரூபாய்கள் |
|---|---|
| ஆட்டு ரோமம் கம்பளி .... | 3,36,73 |
| பாரபின் (Paraffin) மெழுகு ... | 2,31,74 |
| பிண்ணாக்கு .... | 2,00,68 |
| அரக்கு .... | 1,83,94 |
| சாயமேற்றவும் பதனிடவும் வேண்டியசாமான்கள் ... | 83,94 |
| அபிரேகம் .... | 39,36 |
| எலும்பு .... | 45,14 |
| மற்றவைகள் .... | 2,94,35 |

# இறக்குமதி அட்டவணை.

## அட்டவணை VII.

### அயல்நாடுகளிலிருந்து இறக்குமதியாகும் சாமான்கள்.

(Review of Certain Main Items of Foreign Trade during the Calendar Year 1933, page 39.)

| சாமான்கள் | பெறுமானம் லக்ஷக்கணக்கான ரூபாய்கள் |
|---|---|
| துணி-பருத்தி .... | 14,41 |
| நூல்-பருத்தி .... | 2,68 |
| மண்ணெண்ணெய்: | |
| கிரோஸின் ... | 2,21 |
| மற்றவை .... | 3,80 |
| சர்க்கரை ... | 3,29 |
| உப்பு .... | 51 |
| உலோகங்கள் : இரும்பு-எஃகு... | 5,32 |
| ,, மற்றவைகள்... | 3,69 |
| யந்திரங்கள் ... | 12,46 |
| மோட்டார் வண்டிகள் ... | 3,07 |
| ரப்பர் சாமான்கள் .... | 1,77 |
| சாராயம் .... | 2,31 |
| புகையிலை .... | 70 |

## அட்டவணை VIII.

### 7-வது அட்டவணையில் குறிப்பிடாத இறக்குமதி யாகும் சில சாமான்கள்.

(From "Review of Trade in India, 1931-32".)

| சாமான்கள் | | பெறுமானம் ஆயிரக்கணக்கான ரூபாய்கள் |
|---|---|---|
| ஆயுதங்கள் (Instruments) | ... | 3,69,20 |
| பட்டு | ... | 2,73,56 |
| சாயங்கள் | ... | 2,67,65 |
| இரசாயனப் பொருள்கள் | ... | 2,56,97 |
| கடுதாசு, அட்டை | ... | 2,50,24 |
| மருந்து | ... | 1,91,11 |
| கண்ணாடி | ... | 1,21,97 |
| ஸோப் | ... | 88,72 |
| பெயின்ட் | ... | 87,53 |
| பூட்ஸ், ஷூ | ... | 64,93 |
| விளையாட்டு சாமான்கள் | ... | 37,04 |
| உரம் | ... | 36,05 |
| குடை | ... | 30,16 |
| கம்பளி | .... | 1,62,06 |
| மற்றவைகள் | .... | 9,64,81 |

## இந்துதேசக் கனிஜப் பொருள்கள்.

இனி நம் தேசத்தில் அகப்படும் கனிஜப் பொருள்களைச் சற்று கவனிப்போம்.

### அட்டவணை IX.

1931 வருஷத்தில் சுரங்கங்களிலிருந்து எடுக்கப்பட்ட சில தாதுக்களும் அவைகளின் மதிப்பும்.

"From Records of the Geological Survey of India, Vol, LXVI, Part iii, 1932.")

| தேசத்தில் அகப்படும் கனிஜப் பொருள்கள் | | பெறுமானம் பவுன்கள் |
|---|---|---|
| நிலக்கரி | ... | 6,125,804 |
| மண்ணெண்ணெய் | ... | 4,380,389 |
| தங்கம் | ... | 1,540,885 |
| உப்பு | ... | 1,010,441 |
| காரீயம், காரீயத்தாது | ... | 939,906 |
| கட்டிடசாமான்கள் | ... | 851,741 |
| மாங்கனீஸ்தாது | ... | 726,954 |
| தாம்ரதாது | ... | 407,181 |
| வெள்ளி | ... | 387,351 |
| இரும்புதாது | ... | 308,055 |
| அபிரேகம் | ... | 307,316 |
| வெள்ளீயத்தாது | ... | 259,806 |
| துத்தநாகத்தாது | ... | 127,669 |
| வெடியுப்பு | ... | 73,414 |
| டங்ஸ்டன்தாது | ... | 65,309 |
| நிக்கல்தாது | .... | 49,924 |

(ore=தாது). ஒரு பவுன் = ரூ. 13-8.

ஒரு மனிதன் கையில் வெண்ணெயை வைத்துக் கொண்டு நெய்க்கு வருந்துவானாகில், அவனைப் பற்றி இதர ஜனங்கள் எவ்வித அபிப்பிராயம் கொள்வார்கள் என்பது எல்லாருக்கும் தெரிந்த விஷயம். அவ்விதமே நம் நாட்டு நிலையுமிருக்கின்றது. வெண்ணெய் போன்ற மூலப் பொருள்கள் நம் நாட்டிலிருந்து வெளி நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டு, அந்நாடுகளிலேயே உபயோகத்திற்குச் சித்தமான நிலையை அடைந்து நெய் போல் நம் தேசத்திற்கு இறக்குமதி யாகின்றன. இதைத்தடுப்பது அவசியமாகும். மற்றும் நம் தேசத்தில் அகப்படும் கனிஜப் பொருள்களைக் கொண்டே, அநேக கோடிக்கணக்கில் யந்திரங்களாகவும் ஆயுதங்களாகவும் இறக்குமதி யாகும் சாமான்களைத் தயாரித்துக் கொள்ளக்கூடும். இவ்வுண்மை மேற் குறிப்பிட்ட நம் தேசத்து ஏற்றுமதி, இறக்குமதி, கனிஜப் பொருள் என்பவற்றின் அட்டவணைகளிலிருந்து நன்கு புலப்படும். அவ்வட்டவணைகளில் குறிப்பிட்ட சில பொருள்களைப் பற்றிச் சற்று கவனிப்போம்.

நம் தேசத்திலிருந்து ஏற்றுமதி யாகும் சாமான்களினுலேயே இறக்குமதியாகும் சாமான்களைத் தயாரித்துக் கொள்ளக்கூடும்.

முதலாவதாகப் பருத்தியை எடுத்துக்கொள்வோம். மதிப்புப் பெறுமானத்தில் பருத்தியே, இறக்குமதியிலும் ஏற்றுமதியிலும் முக்கியமான பொருளாகும். நம்தேசத்திற்குத் தேவையான பருத்தித் துணிகளைத் தயாரித்துக் கொண்டு மிகுதியாயுள்ள பருத்

பருத்தி

தியை அயல் தேசங்களுக்கு அனுப்புவது பாதகம் செய்யாது என்று ஒருவாறு சொல்லலாம். அதுவும் சோம்பேறித்தனத்தையே குறிக்கும். ஏற்றுமதியாகும் சாமான்கள் மூலப் பொருள்களாக இருப்பது எப்பொழுதும் அனுசிதம்; (காரணங்கள் கீழே குறிப்பிடப்படும்.) ஆதலால் பருத்தி, துணியாகவே அயல் நாடுகளுக்கு ஏற்றுமதியாக வேண்டும். அவ்விதமன்றி, நம் தேசத்திலுள்ள பருத்தியையெல்லாம் லங்காஷயருக்கும் (Lancashire) ஜப்பானுக்கும் அனுப்பி, அந்த தேசங்களிலிருந்து துணியாகத் தருவிப்பது நம் தேசத்தின் நன்மைக்கன்று. 1898-99 வருஷத்தில் பருத்தியாகச் சுமார் 11 கோடி ரூபாய்களுக்கும், பருத்தி நூலும் துணியுமாகச் சுமார் 8 கோடிக்கும் நம் தேசத்திலிருந்து ஏற்றுமதியானது. 1931-32-ல் பருத்தியாக ஏற்றுமதியானது சுமார் 24 கோடி ரூபாய்கள் மதிப்பாகும்; அதே காலத்தில் பருத்தி நூலும் துணியுமாக ஏற்றுமதியானதோ 5 கோடி ரூபாய்களுக்கேயாகும். ஆதலால் ஏறக்குறைய இந்த முப்பது வருஷங்களில், பருத்தி அதிகமாக இயற்கை நிலையிலேயே நம் தேசத்தை விட்டு அகன்ற செய்கை, அயல் தேசங்களுக்குப் பருத்தியைத் துணியாகச் செய்வதில் வேலையளித்து ஊதியம் பெறச் செய்து, நம் தேசத்தவர்களை வேலையின்றி வறியவர்களாக்கி இருக்கின்றது.

**எண்ணெய் வித்துக்கள்**

மற்றொரு உதாரணமாக எண்ணெய் வித்துக்களை எடுத்துக்கொள்வோம். எண்ணெய் வித்துக்கள், சற்றேறக்குறைய யாவும் அயல் தேசங்களுக்கு ஏற்றுமதியாகி, ஆங்குள்ள எண்ணெய் ஆலைகளில் எண்ணெய் இறக்கப் பெற்றுப் பெரும்பாகம் நம் தேசத்திற்கே சோப்புகளாகவும், செயற்கை நெய் (artificial ghee, vegetable ghee) யாகவும், பெயின்டாகவும், லூப்ரி கேட்டிங் (கீல்) எண்ணெய்களாகவும் திரும்புகின்றன. மேலே குறிப்பிடப்பட்ட பொருள்கள் நம் தேசத்தில் தயாரிக்கப்பெற்று, தேசத்தின் தேவைக்குமேற்பட்டு மிகுதியாயுள்ளவற்றை, ஏற்றுமதி செய்வதுதான் நியாயமும் லாபகரமானதுமாம். மற்றும் இவ்வித்துக்களை அயல் நாடுகளுக்கு அனுப்புவதினால், ஆடு மாடுகளுக்கு உணவாக உதவும் பிண்ணாக்கு நமக்குக் கிட்டாமற் போய்விடுகிறது. ஆதலால் எண்ணெய் வித்துக்களை அப்படியே ஏற்றுமதி செய்வது பெருந்தவறு. 1933-ம் வருஷத்தில் 1,467 லக்ஷ ரூபாய்கள் மதிப்புள்ள 1,145,000 டன்கள் எடை கொண்ட வித்துக்கள் ஏற்றுமதியாகி இருக்கின்றன. கீழே குறிப்பிட்ட அட்டவணை ஏற்றுமதி செய்யப்பட்ட வித்துக்களையும் அவைகளின் எடையையும் குறிக்கின்றது.

## அட்டவணை X.

## 1933 வருஷத்தில் ஏற்றுமதியான எண்ணெய் வித்துக்களும் அவைகளின் நிறையும்

(From " Review of certain main items of foreign trade during the Calendar year 1933 " P. 35.)

| வித்துக்கள் | | ஆயிரம் டன்கள் |
|---|---|---|
| ஆளிவிதை | .... | 347 |
| ரேப் | .... | 76 |
| நிலக்கடலை | .... | 587 |
| ஆமணக்கு | .... | 89 |
| பருத்திக்கொட்டை | .... | 7 |
| எள் | ... | 17 |
| மற்றவை | .... | 22 |

தோல்

இன்னுமொரு உதாரணம் எடுத்துக் கொள்வோம். 1933-ம் வருஷத்தில், 406 லக்ஷ ரூபாய்கள் மதிப்புள்ள 38,000 டன்கள் பதனிடாத் தோலும், 507 லக்ஷ ரூபாய்கள் மதிப்புள்ள 1,800 டன்கள் பதனிட்ட தோலும் ஆக ஏற்றுமதி செய்யப்பட்டன. ஆனால் சுமார் ஒரு கோடி ரூபாய்கள் பெறுமான தோல் சாமான்கள் இறக்குமதி செய்யப்பட்டிருக்கின்றன. இதை நாம் சுலபமாகத் தடுக்கக்கூடும்.

இயற்கை வளத்தையும் தேச விஸ்தீரணத்தையும் உத்தேசிக்கின் இங்கு ஏற்பட்டுள்ள கைத்தொழில் அபிவிருத்தி போதாது

இறக்குமதிகளைக் குறிக்கும் VII-வது VIII-வது அட்டவணைகளைக் கவனித்தால், இறக்குமதியாகும் பொருள்கள் அனைத்தும், நம்தேசத்தில் அகப்படும் கனிஜப் பொருள்களிலிருந்தும் விளைபொருள்களிலிருந்தும், தயாரித்துக் கொள்ளக் கூடுமென்பது நன்கு விளங்கும். முக்கியமாக இரும்பு எஃகு இவைகளால் செய்யப்பட்ட சாமான்களைப் பற்றி, இவ்விடம் குறிப்பிட வேண்டும். சுமார் 25 கோடி ரூபாய்கள் வரை, நம் தேசத்தில் யந்திரங்களாகவும், மோட்டார்களாகவும், மற்றும் இதர இரும்பு சாமான்களாகவும் 1933-ம் வருஷத்தில் இறக்குமதியாயிருக்கின்றன. தேசத்தின் கனிஜப் பொருள்களின் வளத்தைக் குறிக்கும் IX-வது அட்டவணையைக் கவனித்தால், நம் தேசத்திற்குத் தேவையான இரும்பு சாமான்கள் அனைத்தும் நாமே தயாரித்துக்கொள்ளக் கூடுமென்பது விளங்கும். நம்தேசத்தில் அங்குமிங்கும், அநேகம் தொழில்களுக்காக ஆலைகள் ஸ்தாபிக்கப் பட்டிருந்தாலும், அவை தேச விஸ்தீரணத்திற்கும், தேவைக்கும் போதிய அளவு இல்லை. நம் தேசத்திற்குத் தக்கவாறு தொழில் ஆலைகள் ஸ்தாபனம் செய்து கைத்தொழில்களை அபிவிருத்தி செய்தாலொழிய தேசத்தில் சுபிக்ஷம் ஏற்படுவது அசாத்தியம், தற்காலம் தேசம் இருக்கும் நிலையைப் பார்த்தால் ஒன்று அல்லது இரண்டு வருஷங்களில் ஒரு பஞ்சம்

ஏற்படுமென்பதற்கு வேண்டிய அறிகுறிகள் காணப் படுகின்றன. ஏற்கெனவே வட இந்தியாவில் சில பாகங் களில் பஞ்சம் ஏற்பட்டிருக்கிறது. தென் இந்தியா விலும் சில பாகங்களில் இருக்கின்றது. முன் எச்சரிக் கையாகவே ஜனங்களைக் கைத்தொழில்களில் பிரவர்த் திக்கச் செய்தாலொழிய, பஞ்சத்தின் கொடுமையை நிவர்த்திக்க வேறு மார்க்கம் இல்லை. நிலச்சாகுபடியைத் தவிர, வேறு துறைகளில் பொருள் சம்பாதிக்க முடி யாத காரணத்தினாலேயே, ஜனங்கள் தக்க ஆதரவு அற்றுப் பஞ்சத்தில் மிகுந்த கஷ்டத்திற்கு உள்ளாகின் றனர்.

மூலப் பொருள்களையே ஏற்றுமதி செய்வதினால் விளையும் கேடு

நம் தேச ஜனங்கள், அரோக திடகாத்திரர்களாகவும் தனிகர்களாகவும் இருக்க வேண்டுமாயின், தேவைக்கு மேல் விவசாயத்தில் ஈடுபட்டிருப் பவர்களைக் கைத்தொழில்களில் பிரவேசிக்கச்செய்வது மிகவும் அவசியமாகும். அவ்விதமின்றி தேசத்தில் அகப்படும் மூலப் பொருள்களை, இயற்கை நிலையி லேயே, அயல் நாடுகளுக்கு அனுப்புவதில் ஒரு பெருந் தீமையுண்டு. ஏனெனில் விற்பனையாகும் அளவும் இடமும் ஒரு நிலையாக இரா. சில உதாரணங்கள் எடுத்துக்கொள்வோம்.

(a) நம் தேசத்திலிருந்து ஏற்றுமதியாகும் விளை பொருள்களில், சணலைத் தவிர மற்றவைகள் எல்லாம், உலகத்தில் மற்ற பாகங்களிலும் விளையக் கூடியவைக ளாகும். ஆதலால் அப்பொருள்களுக்கு அயல் நாடு

களிலிருந்து போட்டி ஏற்படுகின்றது. இவ்விதமன்றி இப்பொருள்களுக்கு ஈடான குணமுள்ள மாற்றுப் பொருள்கள் (Substitutes) அயல் தேசங்களிலிருந்து சுலபமான விலைக்குக் கிடைக்குமாயினும், ஏற்றுமதியாகும் பொருள்களுக்குப் பாதகம் ஏற்படும். சில வருஷங்களுக்குமுன் நம் தேசத்திலிருந்து ஏராளமாக எண்ணெய் வித்துக்கள் ஐரோப்பிய நாடுகளுக்கு ஏற்றுமதிசெய்யப்பட்டு வந்தன. இவைகளில் சிலவற்றிலிருந்து, சோப்புக்கள் செய்வதற்காகவும், உணவில்சேர்த்து உபயோகிப்பதற்காகவும், எண்ணெய் இறக்கி வந்தனர். இவ்விதத் தேவைகள் மற்ற தேசங்களிலிருந்து ஏற்றுமதியாகும் பாம் ஆயில் (Palm-oil), சோயா பீன் ஆயில் (Soya bean oil) என்ற மாற்றுப் பொருள்களினால் குன்றி, பொதுவாக எண்ணெய் வித்துக்களின் விலை குறைந்து, முக்கியமாக நிலக்கடலை பாதிக்கப்பெற்றிருக்கிறது. அதற்குப்பின் குறைந்த விலைக்கே அதிக எடையுள்ள நிலக்கடலை ஏற்றுமதியாயிருக்கிறது.

(b) நம் தேசத்தில் 'மாங்கனீஸ்' தாது ஏராளமாக அகப்படுகின்றது. ரஷியாவிலும் அவ்விதமே அகப்படுகின்றது. ஐரோப்பிய யுத்தம் நடந்தபொழுதும், ரஷியதேசத்தில் ராஜீய அமைதி ஏற்படுவதற்கு முன்பும், சற்றேறக் குறைய உலகத்தின் தேவையனைத்திற்கும் நம் தேசமே இத்தாதுவை ஏற்றுமதி செய்து வந்தது. யுத்தம் நின்று, ரஷியாவும் ஏற்றுமதிசெய்ய ஆரம்பித்தவுடன், அந்த தேசத்துடன் போட்டியிட்டு

நிற்கமுடியாமல் நம் தேசத்தில் அநேக சுரங்கங்களில் வேலை நிறுத்தம் செய்யப்பட்டிருக்கின்றது.

ஆதலால், தேசத்தில் அகப்படும் இயற்கைப் பொருள்களை, அந்த நிலையிலேயே அயல் தேசங்களுக்கு ஏற்றுமதிசெய்வதைக் குறைத்து, அவைகளிலிருந்து உபயோகத்திற்குச் சித்தமான நிலையில் இறக்குமதியாகும் சாமான்களை நாமே தயாரித்துக் கொண்டும், அவைகளுக்குப் புதிய உபயோகங்கள் கண்டு பிடித்தும், அவைகளைக் கையாளவேண்டும். அவ்விதம் செய்வதே தேசத்திற்கு நல்ல பலனைக் கொடுக்கும்.

தேசத்தில் ஸ்தாபனம் செய்யக்கூடிய கைத்தொழில்கள்.

நட்தேசத்தின் விளைபொருள், கனிஜப்பொருள்களின் வளத்தை உத்தேசித்து, கீழே குறிப்பிட்ட கைத்தொழில்களை அபிவிருத்திக்குக் கொண்டுவர வேண்டும். சில ஏற்கனவே ஸ்தாபனஞ் செய்யப்பட்டிருக்கின்றன. மற்றும் சில ஆரம்பிக்கப்படவில்லை. நம் தேசத்திற்குத் தக்கவாறு பலதொழில் ஆலைகளை அமைத்து தேச சுபிக்ஷத்தை நாடவேண்டியது ஜனங்களின் கடமையாகும்.

1. நிலக்கரி முதலிய தாதுப் பொருள்களைச் சுரங்கங்களிலிருந்து வெட்டி எடுத்தல்.

2. இரும்பு எஃகு சாமான்கள் செய்தல்.

3. யந்திரங்கள் செய்தல்.

4. கப்பல் கட்டுதல்.
5. மோட்டார்கள் தயாரித்தல்.
6. மின்சாரக் கைத்தொழில்கள்.
7. காகிதம்.
8. உரங்கள்.
9. சிமென்ட், சுண்ணும்பு, கண்ணுடி.
10. பருத்தி, கம்பளி, பட்டு, செயற்கைப்பட்டு, சணல் ஆகியவற்றின் நெசவு.
11. புகையிலைப் பண்டங்கள், பானவகைகள், உணவுப் பொருள்கள் தயாரித்தல்.
12. சர்க்கரை.
13. உலோக (தகடு) வேலை.
14. கடிகாரங்கள் செய்தல்.

அயல் நாடுகளில் இவ்விதக் கைத்தொழில்கள் நடைபெற்று வருகின்றன. அதுபோலவே நம் தேசத்திலும் நடைபெறவேண்டும்.

கைத்தொழில் அபிவிருத்தியில் முன்னேற்றமடைந்த பிரிட்டன், ஜப்பான், ஜெர்மனி போன்ற நாடுகளுக்கு ஓர்வித இடையூறு உண்டு. அந்த நாடுகளுக்குத் தேவையாயுள்ள மூலப்பொருள்களை ஓரிடத்திலிருந்து கொண்டுவர வேண்டும்; உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களை விற்பனை செய்ய மற்ெருரு இடம் தேடவேண்டும். நவீன விஞ்ஞான ஆராய்ச்சிகளின் பயனுக, ஓர் தேசத்தில், சர்வ சாதாரணமாக அகப்படும் பொருள்களை வைத்துக்கொண்டு அந்த தேசத்து ஜனங்

களின் தேவைகள் அனைத்திற்கும் வேண்டிய பொருள்களைத் தயாரித்துக்கொள்ளக்கூடும். ஆதலால் ஒரு தேசம் கைத்தொழில்களில் அபிவிருத்தி அடைய வேண்டுமானால், அங்கு உற்பத்தி செய்த பொருள்களை விற்கக்கூடுமா என்பதை அறிந்துகொள்ளவேண்டியது அவசியம்; அதாவது விற்பனை ஸ்தலங்களே முக்கியம். இவ்விஷயத்தில் நம் தேசத்தைப்பற்றி கவனிப்போமானால், உற்பத்தி செய்யக்கூடிய பொருள்கள் அனைத்தும், நம் தேசத்திலேயே, விற்க முடியும். இது ஒரு பெரும் சாதகம். இதிலிருந்து, இப்பொழுது ஜெர்மனி தான் இழந்த குடியேற்ற நாடுகளைத் (colonies) திரும்பக் கேட்பதும், இட்டாலி குடியேற்ற நாடுகள் அதிகமாக வேண்டுவதும் விளங்கும். ஆதலால் நம் தேசத்தவர்கள் துணிவுடன் கைத்தொழில்களின் அபிவிருத்தியில இறங்கலாம் என்பது நிதர்சனமாகத் தெரிகிறது. ஆனால் இதற்கு அரசாங்கத்தாரின் உதவி அவசியம் வேண்டும்.

## III. மூன்று வகைக் கைத்தொழில் ஸ்தாபனங்கள்.

தொழில் ஆலைகளின் அமைப்பும், தொழில் முறைகளும், அவற்றின் சார்பாகச் செலவிடப்பட்ட மூலதனத் (capital) திற்குத் தக்கவாறே யாகும். ஆதலால், கைத்தொழில்களை, அவைகளுக்குச் செலவிடப்பட்ட மூலதனத்திற்கேற்ப, பொதுவாக மூன்று வகைகளாக வகுக்கலாம்.

1. லக்ஷ ரூபாய்களுக்கு உட்பட்ட மூலதனம் வேண்டியிருக்கும் கைத்தொழில்கள் முதல் வகையாகும்.

2. லக்ஷத்திற்குமேல், முப்பது லக்ஷத்திற்கு உட்பட்ட மூலதனம் வேண்டிய கைத்தொழில்கள் இரண்டாவது வகையாகும்,

3. முப்பது லக்ஷத்திற்குமேல் தேவையாயுள்ள கைத்தொழில்கள் மூன்றாவது வகையாகும்.

### கிராமக் கைத்தொழில்கள்.

முதல் வகைக்கு உட்பட்ட கிராமக் கைத்தொழில்கள்.

போக்குவரவு வசதிகள் குறைவாக இருந்த முற்காலத்தில், பிரதிதினமும் கையாளப்படும் சாமான்கள் வெகு தூரத்திலுள்ள இடங்களிலிருந்து வருவது அசாத்தியம். அந்நிலையில், ஒரு பிரதேசத்தில் சுற்றுப்புறமுள்ள சில கிராமங்கள் ஒன்று சேர்ந்து, அவ்வக்கிராமங்களின் சௌகர்யத்திற்கு ஏற்ப, கிராமங்களுக்குத் தேவையான பொருள்கள் எல்லாவற்றையும் தயாரித்து வந்தன. இவ்வித ஏற்பாட்டின் பயனைக்

கிராமங்களில் பல கைத்தொழில்கள் செழித்தோங்கி வந்தன.

அவைகள் மாய்ந்ததின் காரணம்.

அயல் நாடுகளுடன் வர்த்தகம் செய்யப் போக்கு வரவு வசதிகள் அதிகமாகவே, ஏற்கெனவே கிராமங்களில் செய்யப்பட்ட பொருள்கள் அனைத்தும் அயல் நாடுகளில் யந்திரங்களின் உதவியால் தயாரிக்கப் பெற்று, அதனால் குறைந்த விலைக்கு விற்கப்படும் அதே சாமான்களுடன் போட்டியிட்டு நிற்க முடியாமல் முன்னொருகால் செழித்தோங்கி நின்ற கிராமக் கைத்தொழில்கள், நாளடைவில் சிதைவுற்று, ஆதரவற்று மாய்ந்தன. எஃகு, இரும்பு உப்பு நெசவுத் தொழில்கள் அனைத்தும் முன்னாட்களில் கிராமக் கைத்தொழில்களாக இருந்து செழித்தோங்கி நின்றன. இப்பொழுது நிலைமாறி, கிராமவாசிகள் ஜீவனம் செய்வதற்கு நகரங்களுக்குச் செல்லுகின்றனர். கிராமத் தொழில்களைப் புனருத்தாரணம் செய்தாலொழிய, நம் தேசத்திற்கு விமோசனம் ஏற்படாது. கீழே குறிப்பிடப்பட்டிருக்கும் கைத்தொழில்களை கிராமங்களிலும் நகரங்களைச் சார்ந்த சுற்றுப்புறங்களிலும் ஸ்தாபனம் செய்யலாம்.

சில கிராமக் கைத்தொழில்கள்.

1. பருத்தி பிரிப்பது; நூல் நூற்பது; பட்டுசுற்றுவது; ஜமக்காளம், துப்பட்டி, துணி வகை நெய்வது.

2. சாயங்கள், வர்ணங்கள் மை தயாரித்தல்.

3. செம்பு, பித்தளை, அலுமினியம் சாமான்கள் செய்தல்.

4. விளையாட்டு சாமான்கள் செய்தல்.

5. இனாமல் சாமான்கள் செய்தல்.

6. உணவுப் பொருள்களும், பானவகைகளும் தயாரித்தல்.

7. புகையிலையினால் தயாரிக்கப்படும் பொருள்கள்.

8. எண்ணெய், சோப்.

9. தேன் சேகரித்தல்.

10. குயத்தொழில், வீடுகட்டுதல்.

11. பாய், கூடை, கயிறு பின்னுதல்.

12. கண்ணாடி சாமான்கள், வளையல்கள் செய்தல்.

13. பென்சில், பொத்தான் தயாரித்தல்.

14. அச்சிடுதல், புஸ்தகம் இணைத்தல்.

15. செருப்பு முதலிய தோல் சாமான்கள் தயாரித்தல்.

16. நெல் குற்றுதல், மா அரைத்தல், தானியங்கள் உடைத்தல் முதலியவற்றை யந்திரவாயிலாகச் செய்யாமல் தேகவுழைப்பைக் கொண்டு முடித்தல்.

குறிப்பிட்ட கைத்தொழில்களை ஸ்தாபனம் செய்வதற்குமுன், சில விஷயங்களைக் குறித்து ஆராய்தல் அதிக அவசியமாகும். அவற்றுள்

கைத் தொழில்கள் முதல் முதலாக நம் தேசத்தை
ஸ்தாபனம் செய் சுமார் 1000 வீடுகளும், 5000
வதற்கு முன் ஜனங்களும் கொண்ட பல பாகங்
கவனிக்க வேண் ளாகப்பிரித்து, அந்த ஸ்தலங்க
டியவைகள். ளில் பிரமுகர்களாக இருக்கும்
குடும்பத்தலைவர்களையும் வியாபாரி
களையும் தொழில் சம்பந்தமானவற்றில் நிபுணர்

பொருள்களை உற்பத்தி செய்தால், அவைகள் விற்பனை யாகாமல் நஷ்டம் அடைவது நிச்சயம். மேலும், பெரியதொழில் ஆலைகளை ஏற்படுத்துவதால், ஆயிரக் கணக்கான தொழிலாளிகள் ஓர் இடத்திலேயே கூடு பவர்களாய், அவர்கள் பலவித துன்பங்களுக்கும் உட் பட்டு, முதலாளி—தொழிலாளி என்ற பேதம் ஏற் பட்டு, பலசச்சரவுகளும் உண்டாய் விடுகின்றன. சரியான நிர்வாக முறையை அனுஷ்டித்தால் ஒரே தொழிலைத் தக்க பிரிவுகளாக வகுத்து, வெவ்வேறு இடங்களில் சிறிய ஆலைகள் ஸ்தாபனம் செய்து கொண்டு, மேற்கூறிய கெடுதல்கள் யாவுமின்றிக் கைத் தொழில்களை நடத்தலாம்.

இன்னும் யுத்த காலங்களில் விரோதிகள், ஜனங் களின் மனதிற் பீதி உண்டாக்குவதற்காகக், கைத்தொ ழில்கள் அபிவிருத்தியடைந்த நகரங்களிலேயே தங்கள் கவனத்தைச் செலுத்தி, அவைகளை ஆகாய விமானத்தின் உதவியால் தாக்கி நாசம் செய்கின்றனர். ஆதலால் நகரங்களைச் சுற்றி, பல கைத்தொழில் ஆலை களை ஸ்தாபனஞ் செய்வதால் தேசத்திற்கு அதிக நஷ் டம் ஏற்படலாம். ஒரு தொழிலை யுக்தமாக வகுத்து, பிரிவுகளை வெவ்வேறு இடங்களில் ஸ்தாபனம் செய்வ தால், யுத்தகாலங்களில் ஏற்படக்கூடிய நஷ்டங்களைக் குறைத்துக் கொள்ளலாம்.

நம் தேசத்திற்கு நல்லகாலம் ஏற்பட்டு விட்டது என் பது நன்கு வெளியாகிறது. ராஜீய விஷயங்களில் காங் கிரஸ், மிதவாதி, பிற்போக்கானவர்கள் என்ற பற்பல

கக்ஷிகள் உண்டு. கிராமவாசிகளின் நிலையை நன்கு அறிந்த மகாத்மாகாந்தி, அவர்களுடைய நன்மையை உத்தேசித்து, கிராமக் கைத்தொழில்களை அபிவிருத்தி செய்ய முன் வந்து வேண்டிய திட்டமிட்டவுடன், பல கக்ஷியினரும் தங்களுக்கு ராஜீய விஷயங்களில் அபிப்பிராய பேதம் இருந்தபோதிலும், கிராமக் கைத்தொழில்களின் அபிவிருத்தியில் வித்தியாசபாவ மில்லாமல் ஒத்துழைக்க முன் வந்திருப்பது தேசத்தின் நல்ல காலத்தைக் குறிப்பதே யாகும். அரசாங்கத்தார்களும் பொருள் உதவி செய்ய முன்வந் திருக்கின்றனர். இந்த நல்ல சமயத்தை நழுவவிடாமல், பொது ஜனங்கள் தங்களுடைய நன்மையை உத்தேசித்தே, மேன்மேலும் ஊக்கம் எடுத்துக்கொண்டு, முழு மனதுடன் இத்துறையில் உழைத்து பூர்ண சௌகர்யம் அடைய வேண்டும்.

## மத்தியதரக் கைத்தொழில்கள்.

இரண்டாவது வகைக் கைத்தொழில்கள்.

இவ்விதக் கைத்தொழில்கள் நடத்துவதற்கு முப்பது லக்ஷ ரூபாய்கள் வரையில் பிடிக்கும். ஆதலால் இவைகளைக் கூட்டுக் கம்பெனி (Joint Stock Companies) களாக நடத்துவது உசித மாகும்.

அவைகளை ஸ்தாபனம் செய்வதற்கு முன் கவனிக்க வேண்டிய விஷயங்கள்.

இக் கைத்தொழில்களை ஸ்தாபனம் செய்வதற்கு முன் அவைகளுக்கு வேண்டிய இயற்கைப் பொருள்களின் வளம், யந்திரங்களை ஓட்டுவதற்குத் தேவையான சக்தியின் அளவு, உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களை விற்பனை செய்வதற்குள்ள ஸ்தலங்கள், மற்றப் போக்குவரவு வசதிகள் முதலியவற்றைக் குறித்துப் புள்ளி விவரங்கள் தயாரிப்பது அரசாங்கத்தாரின் கடமையே யாகும். அவ்வப் பிரதேசங்களைச் சேர்ந்த பிரதானமான தனிகர்கள், வர்த்தகர்கள், பிரமுகர்கள் இவர்கள் அபிப்பிராயத்தை அனுசரித்துத் தேவையான கைத்தொழில்களை ஸ்தாபனம் செய்ய வேண்டும். மேலும் இவ்விதக் கைத்தொழில்களைப் பிரவர்த்திப்பதற்கு ஆவா உள்ளவர்களையும் தொழில்களின் நுட்பத்தை நன்கு அறிந்த நிபுணர்களையும் கூட்டித் தீவிர ஆலோசனை செய்து, அயல் நாடுகளில் இவ்விதக் கைத்தொழில் நடத்துபவர்களின் அனுபவத்தையும் ஆராய்ந்து, அவ்விதம் அனுபவத்தில் தேர்ச்சி பெற்ற இரு நிபுணர்களிடமிருந்து பிரத்தியேக மாக அவர்களின் அபிப்பிராயத்தை அறிந்த பின்னர், கைத்தொழில்களை ஸ்தாபனம் செய்வது அவசியமாகும். இவ்வகுப்பில் சேர்க்கக் கூடிய சில கைத்தொழில்க ளாவன :—

1. யந்திரங்கள் செய்வது.

2. எஃகு ஸாமான்கள் செய்வது.

3. மத்தியதரமான பருத்தி, கம்பளி, பட்டு நெசவு ஆலைகள் அமைத்தல்.

4. இரசாயன ஸாமான்களும் சாயங்களும் தயாரித்தல்.

5. சர்க்கரை ஆலைகள் அமைத்தல்.

6. காகிதம் செய்யும் ஆலைகள் அமைத்தல்.

7. உரங்கள் தயாரித்தல்.

8. சோப்புகளும் வர்த்திகளும் செய்தல்.

9. நெருப்புப் பெட்டி செய்தல்.

10. செமன்ட், பீங்கான் ஸாமான்கள் வனைதல்.

11. தோல் பதனிடுதல்.

12. சினிமா பில்ம் (Film) கள் தயாரித்தல்.

இவைகளில் அநேகங் கைத்தொழில்கள் நம் தேசத்தில் ஸ்தாபனம் செய்யப்பட்டிருக்கின்றன. ஆனாலும் இவைகளின் எண்ணிக்கை மிகவும் குறைவு. அயல் நாடுகளிலிருந்து இறக்குமதி யாகும் ஸாமான்களுக்குத் தக்க இறக்குமதி வரி விதித்து, தேசிய கைத்தொழில்களுக்கு ஆதரவு அளிப்பது அரசாங்கத்தாரின் கடமையாகும். இவ்விதப் பாதுகாப்பு அளிக்கப்பட்டால் மேற்கூறிய கைத்தொழில்கள் நன்கு அபிவிருத்தி அடையும்.

மூன்றுவது வகைக் கைத்தொழில்கள்.

## பெருங் கைத்தொழில்கள்.

இவ்விதக் கைத்தொழில்கள் ஸ்தாபனம் செய்வதற்கு முப்பது லக்ஷம் ரூபாய்களுக்குமேல் பிடிக்கும். இவைகள் மற்றைக் கைத்தொழில்களுக்கு ஆதாரமாக இருப்பதால், இவைகள் ஒரு தேசத்திற்கு முக்கியமானவைகளாகும். இவற்றுள் சில கைத்தொழில்கள் கீழே குறிப்பிடப்பட்டிருக்கின்றன. அவையாவன :—

1. நிலக்கரியையும் இதர தாதுப் பொருள்களையும் சுரங்கங்களிலிருந்து வெட்டியெடுத்தல்.

2. இரும்பு எஃகு தயாரித்தல்.

3. யந்திரங்கள் செய்தல்.

4. இருப்புத் தண்டவாளங்கள், இருப்புப் பாதைகளுக்கு வேண்டிய வண்டிகள் செய்தல்.

5. மோட்டார், ஆகாய விமானங்கள் செய்தல்.

6. பெரிய பருத்தி, கம்பளி ஆலைகள் ஸ்தாபனம் செய்தல்.

7. சணல் சாமான்கள் தயாரித்தல்.

8. ரசாயனப் பொருள்கள் தயாரித்தல்.

9. யுத்த தளவாடங்கள் தயாரித்தல்.

10. மின்சார யந்திரங்கள் செய்தல்.

11. விவசாயத்திற்குத் தேவையான யந்திரங்கள் தயாரித்தல்.

12. கப்பல்களும் படகுகளும் கட்டுதல்.

தக்க தேர்ச்சியும் அனுபவமும் வாய்ந்த நிபுணர்களை இவ்விதக் கைத்தொழில்களை நடத்துவது அவசியமாகும். இக்கைத் தொழில்கள் அயல் நாட்டு ஆலைகளுடன் போட்டியிட வேண்டியிருக்கு மாதலால், அரசாங்கத்தார், திரவிய உபகாரத்தினாலும் தேவையான சட்டங்களினாலும், நெருக்கடியான சமயங்களில் முன்வந்து, கைத்தொழில்களை ஆதரிக்க வேண்டும். அரசாங்கத்தார்களும் தேசிய பிரமுகர்களும் தனிகர்களும் ஒன்று சேர்ந்து ஒத்து உழைத்தாலொழிய இவ்விதக் கைத்தொழில்கள் அபிவிருத்தி அடையமுடியாது.

அவைகளின் அபிவிருத்திக்குத் தேவையாயுள்ள வசதிகள்.

இப்பெரிய கைத்தொழில்களை நடத்தும்படி பெரிய வியாபாரிகளையும் பெரிய உற்பத்திசாலைச் (Factory) சொந்தக்காரர்களையும் உற்சாகமூட்டி, வேண்டிய வசதிகளை அளிப்பது அரசாங்கத்தாரின் கடமையாகும். பொது ஜனங்களிடமிருந்து இவ்விதக் கைத்தொழில்களை நம் தேசத்தில் ஸ்தாபனம் செய்வதற்குப் போதிய பொருள் வராவிடில், முன்னாட்களில் நீர்ப்பாசன வசதிகள் ஏற்படுத்துவதற்கும் இருப்புப்பாதைகள் போடுவதற்கும் எவ்விதக் கடன் வாங்கி மத்திய கவர்மெண்டார் அவைகளைச் செய்தார்களோ, அவ்விதமே

இப்பொழுதும் மாகாண கவர்மென்டார்களும் கடன் வாங்கி, மாகாணங்களின் இயற்கை வளத்துக்கு ஏற்பக் கைத்தொழில்களை ஆரம்பிக்க வேண்டும். அரசாங்கத்தார் தேசத்தில் ஏற்படுத்திய கைத்தொழில்களின் அபிவிருத்திக்கு வேண்டிய வசதிகள் கொடுத்து, இனி ஏற்படக் கூடிய கைத்தொழில்களுக்குத் தக்க உதவிகளும் புரிவார்கள் என்ற நம்பிக்கையும் ஏற்பட்டு விட்டால், ஏற்கெனவே கைத்தொழில்களில் ஈடுபட்ட மாகாணங்களில், பெரிய ஆலைச் சொந்தக்காரர்களே மேற் கூறிய கைத்தொழில்களை ஆரம்பிப்பார்கள். இவ்வித நம்பிக்கை ஏற்படாததினால்தான் அநேகந் தொழில் ஆலைகள் நம் தேசத்தில் ஸ்தாபனம் செய்யப் படவில்லை. நம் தேசத்தின் வளத்தையும் குறைந்த ஊதியத்திற்கு உழைக்கும் சாதுர்யம் வாய்ந்த தொழிலாளர்கள் இருப்பதையும் உத்தேசிக்குமிடத்து, அரசாங்கத்தாரிடமிருந்து தகுந்த ஆதரவு இருக்குமாயின், உலகத்தையே பிரமிக்கச் செய்யுமாறு நம் தேசம் முன்னேற்ற மடைந்து விடுமென்பதில் சிறிதும் ஐயமில்லை.

பிரதி வருஷமும் இருப்புப் பாதைகளின் சார்பாகவும் ராணுவத்தை யொட்டியும் நம் அரசாங்கத்தார்கள் அயல் நாடுகளிலிருந்து பலகோடி ரூபாய்கள் பெறுமான ஸாமான்கள் வாங்குகின்றனர். சிலவருஷங்களில் 30 அல்லது 40 கோடி ரூபாய்களுக்கு இவ்விதமான ஸாமான்கள் வாங்கி இருக்கின்றனர். இம்மாதிரி, அயல் நாடுகளிலிருந்து ஸாமான்களை இறக்குமதி செய்யாமல் அவைகளை உற்பத்தி செய்யக்கூடிய

யந்திரங்களைத் தருவித்து, உற்பத்தி செய்யும் முறைகளைப் போதிக்கும் நிபுணர்களையும் வரவழைத்து, நம்மவர்களுக்குப் போதிக்கும்படி செய்தால், நம்தேசத்திற்குத் தேவையான பொருள்கள் தயாரிப்பது மல்லாமல் அயல் நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யவும் கூடும். மற்றும் அரசாங்கத்தார்கள், ஏற்கெனவே ஸ்தாபனம் செய்யப்பட்டுள்ள தொழில் ஆலைகளின் சொந்தக்காரர்களுக்கு இவ்வித ஸாமான்களைத் தயாரிக்கும்படி சொல்லி, அவர்களுக்குத் தேவையாயுள்ள தனமும் இதர சௌகர்யங்களும் அளித்து, அவர்கள் தயாரிக்கும் ஸாமான்களை வாங்கிக்கொள்ளலாம். இவ்வகுப்பில் குறிப்பிட்ட கைத்தொழில்கள் அனைத்தும், அரசாங்கத்தாரின் உதவியின்றி அபிவிருத்தி அடைவது அசாத்தியம்.

முன் பக்கங்களில் குறிக்கப்பட்ட மூன்று வகைக் கைத்தொழில் ஸ்தாபனங்கள் ஒன்றுக்கொன்று போட்டியிடவேண்டியது அவசியமில்லை. அவ்விதம் ஏற்படுமென்று சிலர் தவறான அபிப்பிராயம் கொண்டிருக்கின்றனர். சரியான முறைகளை அனுஷ்டித்தால், பெருங் கைத்தொழில் ஆலைகளில் செய்யப்படும் பொருள்கள், மத்தியதரக் கைத்தொழில் ஆலைகளுக்கும் கிராமங்களில் நடைபெறக் கூடிய கைத்தொழில்களுக்கும் மூலப்பொருளாக (Raw material) இருக்கலாம். இவ்விதமே கிராமங்களில் கிடைக்கும் மூலப்பொருள்களை, அவ்விடங்களிலேயே தக்க நிலைக்குக் கொண்டு

வந்து, மத்தியதரக் கைத்தொழி லாலைகளுக்காவது அல்லது பெரிய தொழிற் சாலைகளுக்காவது அனுப்ப வும் கூடும். ஆதலால் ஆலைகளை நிர்மாணம் செய்யும் பொழுது, இவ்வித நோக்கங்களை மனதில் வைத்துக் கொள்ள வேண்டியது அவசியமாகும்.

இப்பொழுது கிராமக் கைத்தொழில்களை உயிர்ப்பிப் பதில் பலர் ஊக்கங் கொண்டிருக்கின்றனர். அத் தொழில்களைப் புனர் உத்தாரணம் செய்யும் வகையில் பழைய காலத்தில் கையாண்ட முறைகளையே இப்பொ ழுதும் கைப்பற்ற வேண்டு மென்பதில்லை. விஞ்ஞான சாஸ்திரங்களிலிருந்து ஏற்பட்டுள்ள அனுபவத்தைக் கொண்டு புதிய முறைகளைக் கைப்பற்றுவதே மேலா கும். இது கூடாவிடில், பழைய முறைகளைத் தழுவித் தொழில்களை நடத்துவதே உத்தமம்.

## IV. தொழிற்சாலைகள் ஸ்தாபனம் செய்யுமுன் கவனிக்கவேண்டிய விஷயங்கள்.

ஒருவன் ஒரு தொழில் ஆலை ஸ்தாபனம் செய்ய வேண்டுமென்றால் அவன் கவனிக்கவேண்டிய விஷயங்கள் யாவை? ஆலை நிர்மா ஆலை நிர்மாணம் ணம் செய்வதற்கு ஒரு ஸ்தலம் தேர்ந்தெடுப்பது முதல் காரியமாகும். இதன் சமீபத்தில் கைத்தொழிலுக்கு வேண்டிய மூலப்பொருள் (Raw product) யதேஷ்டமாகக் கிடைக்கவேண்டும். இந்த இடம் இருப்புப் பாதைக்கும், துறைமுகத்திற்கும் சமீபமாகவும் இருப்பது அவசியம். மேலும் இது கைதேர்ந்த தொழிலாளிகள் கிடைக்கக்கூடிய இடமாகவும் இருக்கவேண்டும். தற்காலத்தில் யந்திரங்களெல்லாம் மின்சாரம், நீராவி, மண்ணெண்ணெய் (Petrol, Crude oil) இவைகளின் உதவியினால் ஓட்டப்படுகின்றன. இவைகளில், எதை உபயோகிப்பது தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கும்இடத்தில் லாபகரமாக இருக்குமென்பதை நன்கு அறிந்து, அதற்குத் தகுந்தவாறு யந்திரங்களை வாங்குவது முறை. தொழில் நடத்துவதில் நவீனத்தில் கையாளப்படும் முறைகளுக்குத் தகுந்தாற்போலும், பின்னே ஏற்படக்கூடிய மாறுதல்களுக்கு இடராக இல்லாமலும், யந்திரங்களைத் தக்க இடங்களில் ஸ்தாபனம் செய்ய வேண்டும்.

மேற்கூறிய விஷயங்களைப் பற்றிச் சற்று விவரமாகக் கவனிப்போம். தொழிற்சாலைகளை மூலப்பொருள்கள் அகப்படும் இடங்களிலேயே ஸ்தாபனம் செய்வது உசிதம். உபயோகத்திற்குச் சித்தமாயுள்ள ஒரு பொருளின் விலையானது மூலப்பொருள் (Raw products) களின் கிரயம், அவைகளைத் தொழிற்சாலைகளுக்குக் கொண்டுவருவதற்கும் உபயோகத்திற்குச் சித்தமாக வுள்ள பொருள்களை (Finished Goods) அவைகள் தேவையாயுள்ள இடங்களுக்கு அனுப்புவதற்கும் ஆகும் கூலி, வேலையாட்களின் சம்பளம், ஆலையின் சொந்தக்காரர்கள் செலவிட்ட பணத்திற்கு வட்டி, லாபம், இவைகள் யாவும் அடங்கியதாகும். ஆகவே மூலப் பொருள்களைக் கொண்டுவரவேண்டிய செலவு குறைந்தால், உபயோகத்திற்குச் சித்தமாக இருக்கும் ஸாமானின் விலை குறைவாகவே இருக்கும். ஆதலால் மூலப்பொருள் அகப்படும் இடத்திலேயே, தொழில் ஆலைகள் ஸ்தாபனம் செய்வது மேன்மையாம்.

**இடம்**

ஆனால் தொழிற் சாலைகளை, எப்பொழுதும் மூலப் பொருள்கள் அகப்படும் இடங்களிலேயே ஸ்தாபனம் செய்வது அசாத்திய மாகும். தயாரித்த பொருள்களை விற்பனையாகும் ஸ்தலங்களுக்கு அனுப்பவேண்டிய வசதிகளை உத்தேசித்தும், மேற்கூறிய யந்திரங்கள் ஓட்டும் சக்தி சுலபமாகக் கிடைக்கக்கூடியதை உத்தே தேசித்தும், தகுதியான வேறு இடங்களிலும் ஸ்தாபனம் செய்ய வேண்டிவரும். மேலும் யந்திரங்கள்

அனைத்தும், தற்காலத்தில் அயல் நாடுகளிலிருந்து வருவதால், துறைமுகங்களிலிருந்து வெகு தூரம் உள்நாட்டிலுள்ள இடங்களுக்குப் போகும் பொழுது, யந்திரங்களுக்குக் கெடுதி உண்டாகக் கூடும். ஆதலால், துறைமுகங்களுக்குச் சமீபத்திலேயே தொழில் ஆலைகளை ஸ்தாபனம் செய்யவேண்டுவது அவசியமாகும். மற்றும் உற்பத்தி செய்யப்பட்ட பொருள், அயல் நாடுகளுக்கு அனுப்பக் கூடியவைகளாக இருப்பின், அவைகளைத் துறைமுகங்களுக்கே அனுப்பவேண்டும். இன்னும் இருப்புப்பாதை மார்க்கமாக அனுப்புவதைக் காட்டிலும், கப்பல் மார்க்கமாகவே நம் தேசத்தின் ஒரு பாகத்திலிருந்து மற்றொரு பாகத்திற்கு அதிக தூரம் குறைந்த கட்டணத்திற்கு அனுப்பக் கூடுமாதலால், உற்பத்தியான பொருள்களைக் கப்பல் வழியாக அனுப்புவதே லாபகரமாகும். ஆனது பற்றி, தொழிற்சாலைகள் கூடியவரை துறைமுகத்திற்குச் சமீபத்திலேயே இருக்க வேண்டும். ஆதலின் மேற் கூறிய விஷயங்கள் அனைத்தையும் ஆலோசனை செய்து, ஒரு தொழிற்சாலை நிர்மாணம் செய்யவேண்டும்.

தற்காலத்தில் ஆராய்ச்சியின் பயனாகத் தொழில் முறைகளில் அடிக்கடி மாறுதல்கள் ஏற்படுகின்றன.

**யந்திரங்கள்**

உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களின் திறத்தை அதிகப்படுத்துவதையும் விலையைக் குறைப்பதையும் நோக்கமாகக் கொண்டே இவ்வித மாறுதல்கள் ஏற்படுகின்றன. ஆதலால் யந்திரங்கள் தருவிக்கும் பொழுது இவ்வித மாறுதல்களை எதிர்பார்த்து அதற்குத் தகுந்தவாறு ஆலைகள் அமைக்க வேண்டும்.

தொழிலாளிகள்.

நல்ல அனுபவமும் கல்விப்பயிற்சியும் பெற்ற தொழிலாளிகள் கிடைக்கக்கூடிய இடங்களில் தொழில் நடத்துவது சுலபம். ஏனெனில், இவ்விதத் தொழிலாளிகள் தொழிலின் நீக்குப் போக்கு அறிந்தவர்களாக இருப்பதினால், ஆலையின் சொந்தக்காரர்களுக்கு எவ்வித நஷ்டமும் வராமல் காத்து, வேலை செய்யக்கூடிய ஆற்றல் உள்ளவர்களாக இருப்பார்கள். இவர்களுக்கு அதிக சம்பளம் கொடுப்பது அவசியமாகும். தொழில் நடத்துபவர்கள் இவர்களை ஏற்றுக்கொள்வதினால் லாபம் அடைவார்களேயொழிய நஷ்டத்திற்கு உள்ளாகமாட்டார்கள்.

ஏற்கெனவே ஸ்தாபனம் செய்யப்பட்ட ஆலைகள்.

கடைசியாகப் பொருள்களைப் போதுமான அளவு கொள்பவர்கள் (கிராக்கி) இருந்தாலொழிய ஏற்கெனவே ஓர் ஆலை யிருக்குமிடத்து அதே தொழிலிற்காக மற்றொரு ஆலை ஸ்தாபனம் செய்வது அனுசிதம். அப்படிச் செய்தால் ஏற்கெனவே ஆலை ஸ்தாபனம் செய்தவனுக்கு லாபத்தில் குறைவோ அல்லது நஷ்டமோ ஏற்படுவது மல்லாமல், தொழிலாளிகள் ஓர் ஆலையிலேயே ஸ்திரமாக இல்லாமல், ஆலைக்காலை மாறிக்கொண்டு பற்பல உளவுகளையும் வெளியிடச் சந்தர்ப்பம் ஏற்படும். நாளடைவில் இந்நிலை ஆலைகள் க்ஷீணப்பதற்குக் காரணமாகும். ஆதலால் மேலே கூறிய விஷயங்களை யோசித்தே ஓர் ஆலை ஸ்தாபனம் செய்யவேண்டும்.

## V. தேச ஜனங்களின் கடமை.

எல்லாரிடத்தும் காணப்பட வேண்டிய சில குணங்கள்.

ஏழ்மை நிலை நீங்கி, மேம்பாடான வாழ்க்கை நிலை அடைவதற்கு, நம் தேசத்தவர்கள் கைத்தொழில்களிலே பிரவர்த்திப்பது அவசியமென்று எடுத்துக்காட்டி, அவ்விதம் ஏற்படுத்தக் கூடிய கைத்தொழில்களையும் முன்பு குறிப்பிட்டனம். இனி இவ்வித மாறுதல் ஏற்படுவதற்கு தேச ஜனங்களே தீவிர முயற்சி எடுத்துக் கொள்ளவேண்டும். தற்காலத்தில் ஜனங்கள், ஒரு சிறிய காரியம் செய்து முடிப்பதற்கும், அரசாங்கத்தாரின் உதவியை எதிர்பார்க்கின்றனர். அரசாங்கத்தாரின் உதவி வேண்டியது அவசியமேயானாலும், ஜனங்கள் தங்கள் பரஸ்பர உதவியினால் அநேக காரியங்களைச் சாதித்துக் கொள்ளக்கூடும். ஆதலால் நம் தேசத்தில் ஒவ்வொருவரும் உயர்ந்த வாழ்க்கை நடத்த வேண்டுமென்ற ஊக்கங் கொண்டு, பல நற்காரியங்களை ஆரம்பித்து, விடாமுயற்சியுடன் அவைகளைச் சித்திக்குக் கொண்டுவர வேண்டும். ஒவ்வொரு யுவனும், பிரதிதினமும் குறைந்தது எட்டு மணி நேரத்தையாவது நல்ல வழியில் உபயோகித்து தேசத்தை நல்ல நிலைக்குக் கொண்டுவர வேண்டும். தீர்க்க ஆலோசனை செய்து ஒரு காரியத்தைத் துணிந்தும், அதை நன்கு முடித்தபின்புதான் ஓய்வு எடுத்துக்

கொள்வது என்ற திடபுத்தியுடனும் ஊக்கத்துடனும் உழைக்கும் ஆற்றலை ஒவ்வொருவனும் கொள்ள வேண்டும். இவ்விதம் பெரியோர்கள் செய்வதைக் கவனித்த சிறியவர்களும், பெரியோரின் சுவடு பற்றிப் பெரிய காரியங்களைச் செய்து முடிக்கும் ஆற்றல் பெறக் கூடும்.

**கூட்டுறவு**

பலர் ஒன்று கூடி ஒத்துழைத்தால்தான் அநேக காரியங்கள் சித்தி அடையும். ஒரே மனிதனால் அவை நடைபெறா. பலர் கூடி ஒரு காரியத்தை முடிக்கவேண்டுமென்றால் ஒவ்வொருவருக்கும் பரஸ்பரம் நம்பிக்கை இருக்க வேண்டியது அவசியம். அஃதில்லாவிடில் எக்காரியமும் இனிதாய் முடிவு பெறாது. ஆகவே எல்லோரும் அத்தியாவசியமாகப் பரஸ்பர நம்பிக்கை ஏற்று வளர்த்துவர முயன்று கொள்ள வேண்டும். மேலும் நேர்மையான ஒழுக்கமும், எடுத்த கருமத்தை முடிக்கும் துணிபும், விடாமுயற்சியும் ஒவ்வொருவரிடத்திலும் முக்கியமாகக் காணப்பட வேண்டும். அந்நிலையில்தான் ஒத்துழைப்பு சாத்தியமாம். ஜப்பான், பிரிட்டன், அமெரிக்கா போன்ற அயல் நாடுகளில், அத்தேசத்தவர்கள் பொதுஜனசேவையில் எடுத்துக் கொள்ளும் ஊக்கத்தைக் கவனித்தால், அவ்விஷயங்களில் நம் தேசத்தவர்களின் அசிரத்தை எவ்வளவு இழிந்து இகழப்படத்தக்கதாயுள்ளதென்பது நன்கு விளங்கும்.

பலர் ஒன்று சேர்ந்து சாதிக்கக் கூடாதது ஒன்று மில்லை. இவ்விதம் சேர்ந்து, தங்கள் அபிப்பிராயங்களை ஒருமுகமாக வெளியிட்டு, ஆக வேண்டிய காரியங்களை முடித்துக் கொள்வதற்குச் சங்கங்கள் (Associations) முக்கியமான சாதனங் களாகும்.

சங்கங்கள் ஸ்தாபனம்.

கைத்தொழில்களில் அபிவிருத்தி அடைந்த மேல் நாடுகளில் தொழிலாளிகள், உற்பத்தி செய்பவர் கள், வர்த்தகர்கள் முதலிய ஏனையோர் தங்கள் தங்க ளுக்குப் பிரத்தியேகமாகச் சங்கங்கள் ஏற்படுத்திக் கொண்டு, அவைகளுக்குக் கிளைகள் தேசத்தின் பல பாகங்களில் அமைத்து, அவரவர்களுக்கு ஏற்பட்டுள்ள அசௌகர்யங்களை நிவர்த்தித்துக்கொண்டும், முன் னேற்றத்திற்காக முயன்றும் வருகின்றனர்; சங்கங்க ளின் நடவடிக்கைகளைப் பிரசுரிப்பதற்காகத் தாங் களே பிரத்யேகமாகப் பத்திரிகைகளும் வெளியிடுகின்ற னர். ஆதிக்கத்தில் இருப்பவர்களைப் பொது ஜனங்க ளின் இஷ்டப்படி நடக்குமாறு செய்வதற்குச் சங்கங் களே உத்தமமான சாதனமாகும். ஏனெனில் ஒரு சங்கம் ஒரு விஷயத்தைப்பற்றி வெளியிடும் அபிப்பிரா யம் ஒருவனுடையதாக மாட்டாது. அது சங்கத்தின் அங்கத்தினராக இருக்கும் அனைவராலும் ஒரே மனத் துடன் கூறப்படுவதாகும். ஓர் சங்க அங்கத்தினர் களின் எண்ணிக்கையும் கண்ணியமும் அதிகரிப்பின், அச்சங்கத்தின் பலமும் அதிகமாகும்.

ஆதலால் நம் தேசத்தவர்கள் முதல் முதலாகச் செய்யவேண்டிய முக்கியமான காரியம் யாதெனில், பெரிய நகரம் முதல் சிறிய கிராமம் வரையிலும் சங்கங்கள் ஏற்படுத்தி, அந்தந்த ஸ்தலங்களைச் சார்ந்த கல்வி, விவசாயம், சுகாதாரம் கைத்தொழில்கள், மற்றும் ராஜீய விஷயங்கள் ஆகிய இவைகளைப்பற்றிச் சர்ச்சை செய்து, சரியான முடிவிற்கு வந்து, அவ்விதமே காரியங்களை நடத்தி, அவ்வந்த ஸ்தலங்களை அபிவிருத்திக்குக் கொண்டுவர வேண்டியது தானாகும்.

சங்கங்கள் கவனிக்க வேண்டிய விஷயங்கள்.

நம் தேசத்தில் எழுதப்படிக்கத் தெரிந்தவர்களின் எண்ணிக்கை மிகவும் குறைவு. நூற்றுக்குப் பத்து பேர்களுக்கே எழுதப் படிக்கத் தெரியுமென்று சென்சஸ் (Census Report) ரிபோர்டிலிருந்து தெரிய வருகிறது. ஒரு தேசத்திலுள்ள ஜனங்களில் நூற்றுக்குத் தொண்ணூறு பேர்கள், தாங்கள் இருக்கும் கேவலமான நிலையை அறியக்கூடாதபடி, எழுத்து வாசனையற்று இருப்பார்களாயின், அவர்கள் கூடி ஒத்துழைத்து அரும் பெருங் காரியங்களைச் சாதிப்பது அசாத்தியம். கல்வி அறிவை பரவச் செய்வதும், அபிவிருத்திக்குக் கொண்டுவருவதும், இவ்விதச் சங்கங்களின் முதல் நோக்கமாக இருக்க வேண்டும். ஆரம்பக்கல்வி, மத்தியதரக்கல்வி, உயர்தரக்கல்வி ஆகிய இம் மூன்று துறைகளிலும்

கல்வி

முக்கியமாக ஆரம்பக் கல்வியிலும், பொது ஜனங்கள் மிகுந்த ஊக்கம் எடுத்துக்கொண்டு, அவ்வப்போதுள்ள தேவைக்குத் தகுந்தாற்போல் போதிக்கப்படும் விஷயங்களில் தக்க மாறுதல்கள் ஏற்படுத்துவதில் கவனத்தைச் செலுத்தவேண்டும்.

இந்தேசத்தில் மிகப்பலர் விவசாயத்தில் ஈடுபட்டிருப்பதினால் இந்தச் சங்கங்கள் இவ்விஷயத்தில் அதிக கவனத்தைச் செலுத்தவேண்டும்.

**விவசாயம்**

விவசாயத்திற்கு வேண்டிய, வித்துக்கள் உரம் முதலிய, இதர ஸாமான்களும் விவசாயிகளுக்குச் சுலபமாகக் கிடைக்கும்படி செய்தும், நீர்பாசன வசதிகளைக் கவனித்தும், விவசாயப் பொருள்களை நல்ல விலைக்கு விற்பதற்குத் தேவையான மார்க்கங்களை யுண்டாக்கியும் வருவது அவசியம். இவ்வாறு செய்வது சங்கங்களின் பொறுப்பாகும்.

இவைகளன்றி, விவசாயப் பொருள்களைக் கொண்டு ஏற்படக்கூடிய கைத்தொழில்களையும், அவ்விதக் கைத்தொழில்கள் ஏற்கெனவே ஏற்பட்டிருந்தால் நவீன முறைக்குத் தக்கவாறு அவைகளை மாற்றக்கூடிய

**கைத்தொழில்கள்**

அனுகூலத்தையும் கவனித்துப் பரிசீலனைசெய்வதும் அவசியம். புதிய கைத்தொழில்களை ஏற்படுத்தவும், ஏற்பட்ட கைத்தொழில்களை அபிவிருத்திசெய்யவும், அரசாங்கத்தாரைத் தூண்டுவதும் இவ்விதச் சங்கங்களின் நோக்கமாக இருக்கவேண்டும்.

இவ்விதம் கிராம, தாலூகா, ஜில்லா மாகாண சங்கங்களில் அவைகளின் முன்னேற்றத்திற்காக ஆங்காங்குள்ள தனிகர்கள், வர்த்தகர்கள், வேலைகளைத் திறத்துடன் செய்யக்கூடிய சமர்த்தர்கள் சேர்ந்து, மூன்று அல்லது நான்கு வருஷங்களில் ஏற்படவேண்டிய அபிவிருத்திகளைக் குறித்து முன்னதாகவே திட்டம் செய்துகொண்டு, தேச நலனைக் குறித்து உழைத்தாலொழிய, தேசம் செழித்தோங்கி, ஜனங்கள் தனிகர்களாக முடியாது. இவ்வித அபிவிருத்தி ஏற்படுவதற்கு முன் கூறிய சங்கங்களே தக்க ஸாதனங்களாகும்.

**புள்ளி விவரங்கள்**

தொழில்களை ஏற்படுத்துமுன், தொழில்களைச் சார்ந்த பல வகையில் புள்ளிவிவரங்கள் அவசியம் வேண்டும். புள்ளிவிவரங்கள் தயாரிப்பதற்கு, அரசாங்கத்தார்களே தக்கவசதிகள் பெற்றவர்களாயினும், பொது ஜனங்களும் பிரத்தியேகமாகப் புள்ளிவிவரங்கள் தயாரிப்பது அவசியம். இவ்விதம் சேகரிக்கப்பட்ட இரு வகைப் புள்ளிவிவரங்களையும் ஒத்துப் பார்ப்பதற்கு வசதி ஏற்படும். மேற் கூறிய சங்கங்கள் இவ்விஷயத்தில் தீவிரமாக ஈடுபடவேண்டும்.

**பொருட் காக்ஷி சாலைகள்**

மேலும் கைத்தொழில்களை அபிவிருத்தி செய்வதற்கு அவ்வந்த ஸ்தலங்களிலுள்ள மூலப் பொருள்களையும் அவைகளிலிருந்து உற்பத்தி செய்யக்கூடிய ஸாமான்களையும் எடுத்துக் காட்டுவதற்கும் ஆங்காங்குள்ள கைத்தொழில்களை நவீனமுறையில் அபிவிருத்தி செய்யக் கூடிய முறைகளை நிரூபிப்பதற்

கும் பொருட்காக்ஷி சாலைகள் அமைப்பது மிகவும் அவசியம். இந்த வழியிலும் பல்வேறு சங்கங்கள் உழைக்கவேண்டும். பொதுவாகத் தேசமெங்கும் அபிவிருத்தி ஏற்படக்கூடிய எல்லாத் துறைகளிலும் இந்தச் சங்கங்கள் உழைக்கவேண்டும்.

இத்துடன் தேசிய உணர்ச்சியை அதிகரிக்கச் செய்வது இந்தச் சங்கங்களின் முக்கிய நோக்கமாக இருக்க வேண்டும். இவ்வித உணர்ச்சி ஏற் தேசிய உணர்ச்சி படாவிட்டால் தேசம் அபிவிருத்தி அடைவது துர்லபம். உதாரணமாக, பிரிட்டன் தேசத்தின் தற்கால நிலையை எடுத்துக்கொள்வோம். பல வருஷங்களாகக் கைத்தொழில்களில் அது முதன்மை ஸ்தானம் வகித்தபோதிலும், சமீபத்தில் இதர தேசங்களின் கைத்தொழில்கள் அபிவிருத்தியின் பயனாக வெகுவாய்ப் பாதிக்கப்பட்டதனால், பிரிட்டிஷார் தங்கள் தேசத்துக் கைத்தொழில்களை அபிவிருத்தி செய்வதற்குத் தேசிய உணர்ச்சியையே அதிகரிக்கச் செய்யவேண்டியதாயிற்று. ஆனது பற்றி H. R. H. வேல்ஸ் இளவரசர் ("Buy British,") 'பிரிட்டிஷ் சாமான்களை வாங்குங்கள்' என்ற தீவிரப் பிரசாரத்தை ஆரம்பித்தார். கைத்தொழில்களில் அபிவிருத்தி அடைந்த தேசங்களிலேயே இவ்வித முயற்சி எடுத்துக் கொள்ளவேண்டியது அவசியமாயின், நம் தேசத்திற்கு இவ்வித முயற்சி எவ்வளவு வேண்டும்! இவ்வித உணர்ச்சியை அதிகரிக்கச் செய்வதற்குப் பத்திரிகைகள், புத்தகங்கள், துண்டுப் பிரசுரங்கள், விளம்பரங்கள் ஆகியவை

களே தக்க கருவிகளாகும். ஏற்கெனவே இவ்விதப் பிரசாரம் நம் தேசத்தில் பலபத்திரிகைகளின் வாயிலாக நடந்துவருகிறது எனினும், அது போதாது. ஆகையின் அப்பிரசாரம் இன்னும் அதிகப்படவேண்டும்.

பழக்க வழக்கங்களில் ஏற்பட வேண்டிய மாறுதல்கள்

நாம் தற்காலத்தில் அனுஷ்டித்துவரும் பழக்க வழக்கங்களில் சில மாறுதல்கள் ஏற்படவேண்டுமென்று நம் தேசத்தில் சிலபெரியோர்கள் அபிப்பிராயப்படுகிறார்கள். நமது தேசியக் கொள்கைகளுக்கும் வழக்கங்களுக்கும் முரண்பாடில்லாத மாறுதல்களைக் காலத்திற்கு ஏற்ப ஏற்றுக் கொள்வது பொது ஜனங்களின் கடமையாகும். இவ்வித மாறுதல்களை ஏற்படுத்துவதற்கு வேண்டிய பிரசாரம் செய்ய ஆரம்பத்தில் கூறிய சங்கங்கள் உதவி புரியக்கூடும்.

இத்தேசம் முன் காலத்திலிருந்த உன்னத ஸ்திதியையும், தற்காலத்தில் உழன்றுகொண்டிருக்கும் கேவல நிலையையும் நினைத்து, ஒவ்வொரு இந்தியனும் ஓய்வின்றித் தேச அபிவிருத்தியைக் குறித்து உழைக்கக் கடமைப்பட்டவனாகிறான். ஒவ்வொரு கிரியையிலும், தான் செய்வது, தேசத்திற்குநன்மையுண்டாக்குமா, அல்லது தீமை விளைக்குமா வென்று ஆராய்ந்து, நன்மைவிளைவிக்கக்கூடியவைகளையே செய்து, தேச அபிவிருத்திக்காக ஒவ்வொரு இந்தியனும் பாடுபட்டு உழைக்கவேண்

டும். இவ்வித ஊக்கம் ஊட்டுவதற்கு முதலில் எடுத்துக் காட்டிய சபைகளும் சங்கங்களும் நிரம்பவும் உழைத்து வழி காட்டியாகவேண்டும்.

மேற் கூறியபடி நம் ஜனங்கள் ஒன்றுசேர்ந்து ஒத்துழைப்பார்களாயின், அரசாங்கத்தாரின் உதவியை நாடவேண்டியதில்லை; அந்நிலையில் உதவிகேட்டால், அரசாங்கத்தார்களும் உதவிசெய்ய மறுக்கமாட்டார்கள்.

# VI. அரசாங்கத்தாரிடமிருந்து ஜனங்கள் எதிர்பார்க்கும் உதவிகள்.

நம் தேசத்தில் பிரிட்டிஷ் ஆதிக்கம் வேரூன்றி நன்கு ஸ்தாபனம் ஆன பின்பு, நாட்டில் அமைதி ஏற்பட்டிருக்கிற தென்றே சொல்ல பிரிட்டிஷ் ஆட்சி வேண்டும். அதற்குமுன் நாட்டி யின் நன்மைகள். டிலிருந்த சச்சரவுகளும் சண்டை களும் ஓய்ந்து, குடிகள் அவ்வித இடையூறுகள் இல்லாமல் வாழ்ந்து வருகின்றனர். இவ்வரசாங்கத்தார் இருப்புப்பாதை, தபால், தந்தி இவைகளை ஏற்படுத்தியும், அயல் நாடுகளுடன் வர்த்த கத்தை அபிவிருத்தி செய்தும், நீர்ப்பாசன வசதிகள் பல துறைகளில் உண்டாக்கியும், இன்னும் பற்பல வழி களில் தேசத்தை மேலான ஸ்திதிக்குக் கொண்டுவந்தும் நமக்குப் பல வழியிலும் உதவி இருக்கின்றனர். மேலும், இந்தியா கவர்மெண்டாரும், பிரிட்டிஷ் கவர்மென்டாரும் நம் தேசத்தில் விவசாயம், கல்வி, பொருளாதாரம், கைத்தொழில் முதலிய பல துறை களில் செய்ய வேண்டிய சீர்திருத்தங்களை அறிவதற் காகக் கமிட்டிகளையும் கமிஷன்களையும் நியமித்துப் பலநன்மைகளையும் செய்துள்ளனர்.

**அரசாங்கத்தாரும் தொழில் இல்லாமையும்.**

உலகமெங்கும் வியாபாரச் சுணக்கத்தினால், பல ஆயிரஜனங்கள் தொழிலின்றி இருக்கின்றன ரென்பது வாஸ்தவமேயானாலும், மற்ற தேசங்களில் இந்நிலை தாத்காலிகமாக இருக்க, நம் தேசத்திலோ வருஷத்தில் ஆறுமாதங்களுக்குத்தான் ஜனங்களுக்கு வேலையிருக்கின்றது. மற்ற ஆறு மாதங்களும் வேலையில்லாமல் சும்மாயிருந்து வீண் காலம் போக்கிக் கொண்டிருக்கின்றனர். நம் அரசாங்கத்தார் சட்டங்களை நிலை நாட்டுவதில் எவ்வளவு ஊக்கம் காட்டி இருக்கின்றனரோ, அதே ஊக்கம் இத்துறையிலும், அதாவது தொழில் இல்லாமையை நீக்குவதிலும், காட்டியிருப்பார்களாயின், இந்தியக் கைத்தொழில்களின் நிலையும் பொருளாதார நிலையும், உலகத்தையே பிரமிக்கச் செய்து, உன்னத ஸ்திதியில் அமர்ந்து இருக்குமென்று, இத்துறையில் அனுபவம் வாய்ந்த நிபுணர்களும் பிரமுகர்களும் வெகு தடவைகளில் கூறியிருக்கின்றனர். மேல் நாடுகளில் தொழில் இல்லாமையை நிவர்த்திக்கப் பல விசேஷ முறைகளைக் கையாண்டு வருகின்றனர். கைத்தொழில், வியாபார அபிவிருத்தி ஆகிய இவ்விரண்டினால் அல்லாமல், தொழில் இல்லாமையை நீக்கமுடியாது என்று அறிந்து, அந்நாட்டு அரசாங்கத்தார்கள், வேண்டிய ஸாதனங்கள் அனைத்தும் கையாண்டு ஜனங்களின் சௌகரியத்தைத் தேடுகின்றனர். அதுபோலவே நம் தேசத்திலும் அம்முறைகள் அனைத்தும் வெகு தீவிர

மாகக் கையாளப்பட்டாலல்லாமல், நம் தேசம் சுபிக்ஷ நிலையை அடையாது. இத்தொழில் நிலையங்களை ஸ்தாபனம் செய்து துரிதமாகத் தேசத்தை அபிவிர்த்திக்குக் கொண்டுவரக்கூடியவர்கள் அரசாங்கத்தார்களே யாவார்கள்.

**அயல் நாடுகளில் அரசாங்கத்தார்கள் எடுத்துக் கொள்ளும் சிரத்தை: (*a*) அமெரிக்க சிரத்தை**

அமெரிக்க ஐக்கிய மாகாணங்களில் கையாளப்பட்டு வரும் முறைகள் இங்கு கவனிக்கத்தக்கன. அந்நாட்டுக் குடியரசுத் தலைவர், பிரசிடென்டு ரூஸ்வெல்ட், தொழில் இல்லாமையை நீக்குவதற்கு விசேஷ பரிகாரமுறைகளைக் கையாண்டு வருகின்றார். சோவியத் ரஷியாவைத் தவிர, வேறு ஒரு அரசாங்கமும், இவ்வித முறைகளைக் கையாளாததினால், ஐக்கிய அமெரிக்காவில் கையாளப் படும் நவீன முறைகளைப் பலர் கூர்ந்து கவனித்து வருகிறார்கள். எதிர்பார்த்தபடி பயனளிக்கவில்லை யென்று சிலர் கூறியுமிருக்கின்றனர். ஸ்வல்ப பலன் அடைந்ததாகவே வைத்துக் கொள்வோம்; இங்கு கவனிக்க வேண்டியது, பிரசிடென்டு ரூஸ்வெல்ட் மிகத் துணிவுடன் தொழில் இல்லாமையை நீக்குவதற்கு முற்பட்டதேயாகும். இந்தச் சந்தர்ப்பத்தை, பெரிய கைத்தொழில்களி லிருக்கும் ஊழல்களை நிவர்த்திக்கவும், பொதுவாக ஐக்கிய மாகாணத்தின் அபிவிருத்தியை நாடவுமே உத்தேசித்து, அவர் பொறுக்கி எடுத்த

நிபுணர்களைக்கொண்டு ஒரு திட்டமிட்டு,* அத்திட்டத்தை அமுலுக்குக் கொண்டு வந்திருக்கிறார். அத்திட்டத்தில் கீழ்க்கண்ட விஷயங்கள் புலப்படுகின்றன.

1. தொழில் இல்லாமையை நிவர்த்திப்பதற்கு விசேஷ முறைகள் (emergent measures) கையாளப்படல்.

2. ஏற்கெனவே ஏற்பட்டிருக்கும் கைத்தொழில்களின் அபிவிருத்திக்குப் போதுமான திரவிய உதவி செய்வது.

3. புதிய கைத்தொழில்களை ஏற்படுத்துவது.

4. போக்குவரவு ஸாதனங்களைச் சீர்திருத்துவது.

5. விவசாயிகளுக்கு அவர்கள் கடன்களைத் தீர்த்துக் கொள்வதற்கு வசதியளிப்பதுடன் மற்றும் இதர வழிகளிலும் அவர்களுக்குச் சௌகர்யங்கள் ஏற்படுத்துவது.

* The administration of the plan is concentrated in the National Industrial Recovery Council, consisting of members of Cabinet and heads of the ten following administrations:—

(1) National Industrial Recovery Administration—to regulate, direct and approve codes of fair competition for industrial groups.

(2) Transportaion:—To co-ordinate economic adjustments among the rail roads, reduce wasteful competition, and encourage financial reorganization

(3) Reconstruction Finance Corporation:—To make loans to Banks, Insurance companies, and to other financial institutions and to rail roads, and in general to finance many of the recovery projects.

(4) Federal Home Loan Bank Board:—To refinance mortgages of small home owners by means of $ 2,000-million grant.

மற்றுமொரு முக்கியமான விஷயம் வெளிப்படையாகத் தெரிவது யாதெனில், தொழிலாளிகளும் விவசாயிகளும், தங்கள் சீர்கேடான நிலைமையைத் தாங்களே தீர்த்துக்கொள்வது அசாத்தியமென்பதும், அந்நிலையிலிருந்து விலகி சுபிக்ஷ நிலைமை அடைவதற்கு அரசாங்கத்தாரே முன் வந்து, பல துறைகளிலும் வசதியளிப்பதுதான் சாத்தியப்படுத்து மென்பது மாம்.

இவ்விதமே சமீபத்தில் பிரிட்டனுக்கும் ஒரு திட்டம் ஏற்படுத்தவேண்டு மென்று லாயிட் ஜார்ஜ் சொல்லியிருப்பதும் குறிப்பிடத் தக்கதாகும்.

---

(5) Federal EmergencyRelief Administration:—To direct the allocation of $ 500-million voted as direct grants to states for unemployment relief.

(6) Emergency Public Works Administration:—To direct the expenditure of the $ 3,300-million voted for public works to provide employment.

(7) Tennessee Valley Authority;—To develop hydro-electric power at Muscle Shoals and to develop the industrial possibilities of the valley thus furnished with power.

(8) Civilian Conservation Corps:—To employ 250,000 men in reforestation and other conservative projects in forest.

(9) Federal Farm Credit Administration:—To direct all farm credit activities including the $ 2,000-million for mortgage refinancing programme.

(10) Agricultural Adjustment Administration:—To carry out farm relief programme, including control of crop production, to direct all marketing activities including the regulation of grain exchanges, and to levy tax on the processors of farm products to finance the programme.—*New York Herald Tribune*, Paris Edition, Aug. 14th, 1933.—(From League of Nations "World Economic Survey," 1932-33, pp. 316-317)

(b) ஐரோப்பிய சிரத்தை

மேற்கூறியவாறு, தேசிய வர்த்தகம், கைத்தொழில், விவசாயம் இவைகளில் அரசாங்கத்தாரும் வெகுவாக ஸம்பந்தப்படுவது மேல் நாட்டில் இப்பொழுது ஸர்வ சாதாரணம். பிரான்ஸ், ஜெர்மனி, இட்டலி முதலிய தேசங்களும் சற்றேறக்குறைய அமெரிக்க முறையைத் தழுவித் திட்டமிட்டுக்கொண்டு வேலை செய்கின்றனர். ஆயினும் அமெரிக்கா தேசத்தில் இவ்விஷயங்களுக்காகப் பிரமிக்கச்செய்யும் கோடிக் கணக்கான டாலர்கள் செலவிடுவதை யொப்ப, வேறு அயல் தேசங்ககளில் யாரும் செலவிடவில்லை. அவர்களிடத்தில் அவ்வளவு நாணய வசதி கிடையாது.

(c) நம் தேச சிரத்தை

அயல் தேசங்களில் இவ்வளவு ஊக்கமாகவும் தீவிரமாகவும் தொழில்இல்லாமையை நீக்கவும், கைத்தொழில்களை அபிவிருத்தி செய்யவும், அரசாங்கத்தார் முன் வந்திருக்கும் நிலையில், நம்தேசத்தில் சில மாகாண கவர்மெண்டார்கள் தொழில் இல்லாமை யென்ற பிரச்னையே எழவில்லை என்று கூறி இருக்கின்றனர். மற்றும் சிலர் இப்பொழுது ஏற்பட்டிருக்கும் தொழில் இல்லாமை தேசத்தார்களின் பழக்க வழக்கங்களை யொட்டிய தென்றும், அவைகளில் தக்க மாறுதல்கள் இல்லாவிடில் இப்பிரச்னையைத் தீர்ப்பது அசாத்தியம் என்றும் கூறியிருக்கின்றனர். சில மாகாணங்களிலும் ஸமஸ்தானங்களிலும் இவ்விஷயத்தைப்பற்றிப் பரிசிலனைகள் நடத்தியதில்,

தொழி லில்லாமையை நீக்குவதற்கு தேசத்தின் இயற்கை வளத்துக்குத் தக்கவாறு தொழில்களை ஏற்படுத்துவதே உபாயம் என்று நிரூபித்து இருக்கின்றனர். நம் தேசத்திலிருந்து மூலப்பொருள்கள் இயற்கை நிலையிலேயே வெளி நாடு செல்வதையும், அவைகளே மீண்டும் நம் தேச உபயோகத்திற்குச் சித்தமாயுள்ள நிலையில் மீளவும் வந்து சேர்வதையும் குறைக்க அரசாங்கத்தார்கள் முதலில் ஏற்பாடு செய்ய வேண்டும். இரண்டாவதாக ஏற்கெனவே ஏற்பட்டுள்ள கைத்தொழில்களுக்குத் தக்க ஆதரவு அளிக்க வேண்டும். பின்பு, புதிய கைத்தொழில்களையும் ஸ்தாபிக்க வேண்டும்.

**கைத்தொழில் அபிவிருத்திக்கு வேண்டிய வசதிகள்**

கைத்தொழில் அபிவிருத்தி அடைவதற்குப் பல ஸாதனங்கள் வேண்டும். முதல் தேவை புள்ளி விவரங்களே (statistics) யாகும்; அதாவது, கைத்தொழில்களைச் சார்ந்த இயற்கைப் பொருள்களின் வளமை அளவு, அவைகளிலிருந்து உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களின் அளவு, இவ்விதப் பொருள்களை விற்கக் கூடிய இடங்கள், கைத்தொழிலில் ஈடுபடக்கூடிய தொழிலாளிகளின் எண்ணிக்கை இவைபோன்றவையாகும். பின்பு தொழில்களை நடத்துவதற்கு மூலதனம் (capital) வேண்டும். அடுத்தபடியாகக் கைத்தொழில்களின் கூறு அறிந்து வேலை செய்யக்கூடிய தொழிலாளிகள் அவசியம்.

இவ்வசதிகளனைத்தும் இருந்த போதிலும் அயல் நாடுகளில் உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களின் போட்டியினால் இந்நாட்டுக் கைத்தொழில் பாதிக்கப் படாமல் இருக்கவேண்டும்; ஆகையால் கைத்தொழில் களுக்குப் பாதுகாப்பு (protection) வேண்டும். இவைகள் எல்லாமிருந்தும், போக்குவரவு ஸாதனங்கள் இல்லாவிடில் கைத்தொழில்கள் அபிவிருத்தியடையா. மேலே எடுத்துக்காட்டிய வசதிகளெல்லாம் அரசாங் கத்தார்களே அளிக்கக்கூடும்; அரசாங்கத்தாரின் உதவியின்றிக் கைத்தொழில்கள் அபிவிருத்தியடையா. அவைகளைப் பற்றிச் சற்றுத் தீவிரமாகக் கவனிப்போம்.

**புள்ளி விவரங்கள்**

உலகத்தில் கையாளப்படும் பொருள்கள் எல்லாம், இயற்கையில் அகப்படும் விளைபொருள்கள் அல்லது கனிஜப் பொருள்களிலிருந்து செய்யப்பட்டவைகளாகும். ஆதலால் இப்பொருள்கள் அகப்படும் இடங்களையும் வருஷாவருஷம் கிடைக்கக்கூடிய அளவையும் தெரிந்துகொள்வது அவசியமாகும். இது தெரிந்தாலன்றி ஆலைகள் அமைப்பது அசாத்திய மாகும். ஆலைகள் அமைத்து, ஸாமான்களைத் தயாரித்த பின்பு, அவைகளை விற்க இடந்தேடுவது பாராட்டத்தக்க தன்று. ஆதலால் உற்பத்தி செய்த ஸாமான்கள் எந்த இடங்களில் தேவையாயிருக்குமென்று கவனித்து அவற்றின் அளவையும் முன்னதாகத் தெரிந்து கொள்வதே மேன்மையாகும். அப்பொழுதுதான், தேவைக் குத் தக்கவாறு ஸாமான்களைத் தயாரிக்கமுடியும்; இல்லா

விடில் தேவைக்குமேல் தயாரித்துப் பொருள்களை விற்க முடியாமல் நஷ்டத்திற்கு உள்ளாக வேண்டும். ஆதலால் ஒவ்வொரு கைத்தொழிலுக்கும், மேற்கூறிய விஷயங்களில் புள்ளி விவரங்கள் அவசியமாகும். இவைகளைத் தயாரிப்பதற்கு அரசாங்கத்தார்களே முன்வர வேண்டும்; மற்றவர்களால் சேகரிப்பது அவ்வளவு சுலபமல்ல. பொது ஜனங்களும் அவர்கள் ஏற்படுத்திக் கொள்ளும் சங்கங்களின் உதவியைக்கொண்டு புள்ளி விவரங்கள் தயாரித்தல், அரசாங்கத்தார் தயாரித்ததுடன் ஒப்பிட்டுப்பார்க்க முடியும்.

அயல் நாடுகளில் புள்ளி நிலை

கைத்தொழில்களில் அபிவிருத்தி அடைந்த அமெரிக்கா, கிரேட் பிரிட்டன், ஜெர்மனி, பிரான்ஸ், ஜப்பான் போன்ற நாடுகளில் ஆங்காங்கு ஏற்பட்டிருக்கும் வர்த்தக சங்கங்களாலும் (Chambers of Commerce) ஆராய்ச்சிச் சங்கங்களாலும் (Research Associations) அரசாங்கத்தாராலும் பிரசுரிக்கப்படும் பத்திரிகைகளின் வாயிலாக இப்புள்ளி விஷயங்கள் அனைத்தையும் தேசஜனங்கள் அறியக்கூடும்.

இந்தியாவில் புள்ளி நிலை

நம் தேசத்தில் இவ்விதப் பிரசுரங்கள் மிகவும் குறைவே. அவ்விதம் வெளிவருபவைகளும் பூர்த்தியானவையாக இருப்பதில்லை; அவை பொது ஜனங்கள் அறியமுடியாத ஆங்கிலத்தில் பிரசுரமாகின்றன. பிரசுரிக்கப்படும் புள்ளி விவரங்கள் அதிருப்திகரமாயிருப்பதைப் பலர்

எடுத்துக் காண்பித்தும், வெகுகாலம் அதை அரசாங்கத்தார் பொருட்படுத்தாமலிருந்தார்கள். சமீபத்தில் இக்குறையைத் தீர்க்க ஓர் ஏற்பாடு செய்தனர். இந்தியப் பொருளாதார நிலையைப் பரிசீலனை செய்ய, சீமையிலிருந்து பௌலி (Bowley), ராபர்ட்ஸன் (Robertson) என்ற இரு நிபுணர்களைத் தருவித்து நியமித்து, சிபார்சுகள் செய்யும்படி கட்டளையிட்டனர். அவர்கள் மற்றும் சில இந்திய நிபுணர்களுடன் கூடிக் கலந்து, தேசத்தில் சில பாகத்தில் சுற்றுப் பிரயாணம் செய்து, 'இந்தியப் பொருளாதார நிலையைச் சார்ந்த புள்ளி விவரங்கள் தயாரிக்கும் முறை' (A Scheme for an Economic Census of India) என்ற தலைப்பின் கீழ் ஓர் அரிய யாதாஸ்தைத் தயாரித்து அரசாங்கத்தாருக்குச் சமர்ப்பித்தனர். அரசாங்கத்தாரால் இந்த யாதாஸ்து பிரசுரஞ் செய்யப்பட்டிருக்கின்றது. இந்தியாவில் பிரசுரஞ் செய்யப்படும் புள்ளிவிவரங்கள்* சரியான வழியில் இல்லையென்றும், பல விஷயங்களைப்பற்றிப் புள்ளி விவரங்களை பிரசுரிக்

* The statistics of India have largely originated as a bye-product of administrative activities such as the collection of land revenues, or from need of information relating to emergencies such as famines. Only in the case of population census, and to some extent of foreign trade, has there been an organization, whose primary duty is the collection of information. As a result the statistics are uncoordinated, and issued in various forms by separate departments. Though in some branches careful work is being done, and determined efforts made to improve the accuracy and scope of information, in others they are unnecessarily diffuse, gravely inexact, incomplete or misleading, while in many important fields general information is almost completely

கப்படவில்லையென்றும் காண்பித்துப் புள்ளி விவரங்களைத் தயாரிப்பதற்குப் பிரத்தியேகமாக ஒரு இலாகாவை (Department) அமைக்க வேண்டுமென்றும் சிபார்சு செய்து, மற்றும் எவ்வெந்த விஷயங்களைப் பற்றிப் புள்ளி விவரங்கள் தயாரிக்கவேண்டுமென்பதையும், அதன் முறையையும் எடுத்துக்காட்டியிருக்கின்றனர். ஆனால் அவர்களுடைய யாதாஸ்து அரசாங்கத்தாரால் புறக்கணிக்கப் பட்டதாகத் தெரியவருகிறது. அப்படி ஆனால் அரசாங்கத்தார்கள் அவர்கள் எடுத்துக்காட்டிய ஊழல்களை எவ்விதம் நிவர்த்திக்கப் போகிறார்கள்?

மூலதனம்

இயற்கை வளம் அதிகமாக இருப்பதால் மட்டும் கைத்தொழில்களை ஆரம்பிப்பது முடியாது. இயற்கை நிலையிலிருந்து, ஒருபொருளை உபயோக முள்ள ஸ்திதிக்குக் கொண்டுவர யந்திரங்களும் அவைகளை ஸ்தாபனம் செய்யக் கட்டிடங்களும் தேவை. இவ்விதச் செலவிற்கு தனம் அவசியமாகும். நம் தேசத்தில் தனிகர்கள் மிகவும் குறைவு. எல்லாரும் பரம ஏழைகளே. பொது

absent. [(Foot-note). Justification for this statement will be found in Chapter III below. The rural price statistics are diffuse, Bengal rice figures are held to be gravely inexact, birth and death returns are incomplete and so published as to be misleading and there is no general information about wages]. The only co-ordinated general publication is the Statistical Abstract, which omits some important statistics, which must be searched for in other documents. The situation cries out for overhaul under the control of a well qualified statistician. " A Scheme for an Economic Census of India."-Bowley-Robertson, p. 1.

வாக வியாபாரத்திலும் கைத்தொழிலிலும் ஈடுபட ஊக்கமுள்ளவர்களிடத்தில் திரவியமும், பணக்காரர்களுக்கு அவ்வித ஊக்கமும், பரந்த நோக்கமும் இல்லாமலிருப்பதினால், நம் தேசம் கைத்தொழிலில் நன்கு அபிவிருத்தி யடைய வில்லை.

ஆதலால் கைத்தொழில்களை ஆரம்பிப்பதற்கும் அவைகளைத் துரிதமாக அபிவிருத்தி செய்வதற்கும் நாணய வசதி அத்தியாவசியமாகும்.

நாணயவசதி அமெரிக்கா, ஜெர்மனி, ஜப்பான் போன்ற சுயேச்சை கொண்டுள்ள நாடுகள் அனைத்திலும் கைத்தொழில்களை அபிவிருத்தி செய்யப் பிரத்தியேக பாங்குகள் (Industrial Banks) ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. தேவையான சமயங்களில் அரசாங்கத்தார் இவ்வித பாங்குகளுக்கு நாணய வசதிகள் கொடுத்து உதவுகின்றனர். (அமெரிக்காவில் ரூஸ்வெல்டு ஏற்படுத்தியிருக்கும் திட்டங்களைக் கவனிக்கவும்.)

இந்தியன் சென்ட்ரல் பாங்கிங் என்கொயரி கமிட்டி (Indian Central Banking Enquiry Committee) முன்பாக, இந்திய வர்த்தகர்கள் தங்களுக்குத் தற்காலத்தில் இருக்கும் பெரிய பாங்குகள் தேவையான வசதிகள் அளிக்கவில்லை என்று குறைகூறினார்கள். நம் தேசத்தில் பாங்குகளின் எண்ணிக்கை மிகவும் குறைவு. 3,500 ஜனங்களுக்கு ஒரு பாங்குவீதம் 13,000 பாங்குகள் (பிரிவுகள் உள்பட) பிரிட்டனிலும், 44,000 ஜனங்

களுக்கு ஒரு பாங்கு வீதம் 659 பாங்குகள் (பிரிவுகள் உள்பட) இந்தியாவிலும் இருக்கின்றன. இந்நிலையை மேலேகூறிய கமிட்டியார்களே எடுத்துக்காட்டியிருக்கின்றனர். தற்காலத்தில் சாதுரியமான முறைகளை அனுஷ்டியாமை தக்க நிர்வாகம் இல்லாமை ஆகியவற்றின் பயனாக, வியாபாரத்தில் ஈடுபட்டிருப்பவர்களுக்கும் கைத்தொழில் நடத்துபவர்களுக்கும் பாங்குகளுக்கும் யாதொரு ஒத்துழைப்புமின்றி, நம் தேசம் போதிய அளவு பொருளாதாரத்துறையில் முன்னேற்றம் அடையாமல் இருந்துவருகிறது.

ஏற்பட்டுள்ள சில குறைகளை நிவர்த்திப்பதற்காக அரசாங்கத்தார்கள் இப்பொழுது ரிசர்வ் பாங்கு ஸ்தாபனம் செய்துள்ளார்கள். இந்தியர்கள் பலர் புதிய சீர்திருத்தங்களை முழுவதும் ஆதரித்ததாகத் தெரியவில்லை. எவ்விதமிருப்பினும், பாங்குகளே கைத்தொழில்களுக்கும், விவசாயிகளுக்கும், பொதுவாகத் தேசத்தின் பொருளாதார நிலைக்கும் ஜீவாதாரமாக இருப்பதால், தேசத்தின் அபிவிருத்தியைக் குறித்தே பாங்குகள் தங்கள் நாணயத்தை உபயோகிக்கவேண்டும். ஆதலால் தேசியக் கைத்தொழில்களும் விவசாயமும் அபிவிருத்தி அடையுமாறு தேவையான வசதிகள் அளிக்கும்படி பாங்குகளை அரசாங்கத்தார் திட்டஞ்செய்து, தேசத்தின் முன்னேற்றத்திற்கு வழிகாட்டவேண்டும். இதர தேசங்களில் இவ்விதமே செய்திருக்கின்றனர். அமெரிக்க கவர்மெண்டார் செய்திருப்பதை உதாரண

மாக எடுத்துக்கொள்ளலாம். விவசாயிகள் கடன்களைத் தீர்ப்பதற்கும் அவர்களுக்கு வேண்டிய மற்ற உதவிகளைச் செய்வதற்கும் சுமார் இருநூறு கோடி டாலர்கள் பிரத்தியேகமாக எடுத்து வைத்திருக்கின்றனர். மேலும் கைத்தொழில்களுக்கும் இருப்புப்பாதைகளுக்கும் தேவையான நாணய வசதிகள் அளிக்குமாறு ரிகன்ஸ்ட்ரக்ஷன் பைனான்ஸ் கார்ப்பரேஷன் (Re-construction Finance Corporation) என்னும் ஒரு சங்கமும் ஏற்படுத்தி யிருக்கின்றனர். இவ்விதம் இந்திய கவர்மெண்டாரும் செய்வது அவசியம்.

## தொழிலாளிகள்.

தற்காலத்தில் தொழிலாளிகளுக்குள்ள கல்விப் பயிற்சி.

முற்காலத்தில் ஜனங்கள் தங்களுக்குத் தேவையானவைகளைக் கையினாலேயே செய்துகொண்டிருந்தனர். தற்காலத்தில் அவ்விதமின்றி, எவ்வகைச் சாமான்களும் வெகுவாக யந்திரங்களின் உதவியினால் செய்யப்பட்டுவருகின்றன. ஆதலால் இப்பொழுது தொழிலாளிகளுக்கு அவர்கள் கையாளவேண்டிய யந்திரங்களின் ஸூக்ஷ்மங்களும், அவைகள் கெட்டுப்போனால் தாத்காலிகமாகப் பழுதுபார்க்கும் முறைகளும், தெரிய வேண்டியது அவசியமாக இருக்கிறது. ஜனங்களில் பெரும்பாலார் தொழிலாளிகளாகவே இருக்கவேண்டுமாதலால் அதற்குத்தகுந்த கல்வி போதிப்பதுதான் முறையாகும். அவ்விதமின்றி வெகு காலத்திற்குமுன்

திட்டமிட்ட வகையை அனுசரித்துக் காரியாலயங்களில் குமாஸ்த்தாக்களாக அமர்வதற்கேற்ற கல்விப்பயிற்சியை, அவ்விதத்தேவை மறைந்த காலத்திலும், அளிப்பதும் ஏற்றுக்கொள்வதும் அறிவின் செய்கையல்ல. ஆதலால் நம் தேசத்தில் கல்விப்பயிற்சி முறைகளில் தீவிரமான மாறுதல்கள் ஏற்படுத்தப்படவேண்டியது அத்தியாவசியமாகும்.

**அயல் நாடுகளில் கைத்தொழிற் பயிற்சி.**

கைத்தொழில்களில் அபிவிருத்தியடைந்த மேல் நாடுகளில் இளைஞர்கள், கைத்தொழில்களில் அமர்ந்து செவ்வனே வேலை செய்யும் பொருட்டு, அந்தந்த ஸ்தலங்களில் ஏற்பட்டுள்ள கைத்தொழில்களுக்குச் சாதகமாயுள்ள கல்வியைக் கற்பிக்கப்படுகின்றனர். வேலையில் அமர்ந்தபின், பொறுப்பு அதிகமாயுள்ளதாயும் அதிகச் சம்பளம் பெறக்கூடியதாயுமுள்ள உயர்ந்த பதவிகளை அடைய, ஞானமும் அனுபவமும் ஏற்படுவதற்கு வேண்டிய வசதிகளையும் அரசாங்கத்தார் அளிக்கின்றனர். மேலும், நாளுக்கு நாள் செய்யும் ஆராய்ச்சியின் பயனாலும் இதர நாடுகளின் போட்டியின் பாதகத்தினாலும், ஒருவன் புகுந்த தொழிலுக்கு ஹானி ஏற்படுவதால், பிரத்தியேகமான ஒன்று அல்லது இரண்டு கைத்தொழில்களிலும் பயிற்சி அளிக்கின்றனர்.

நம் தேசத்தில் இவ்விதமாகக் கைத்தொழில்களைப் பயில்விக்கும் கல்விச்சாலைகள் மிகவும் குறைவு. தேச விஸ்தீரணத்திற்கும் அதற்குத் தகுந்தாற்போலுள்ள

தேவைக்கும் யாதொரு சம்பந்தமுமின்றி, கல்விப் பயிற்சி அளிக்கப்படுகிறது. கோடிக்கணக்கான ஜனங் கள் எழுத்து வாசனையே யற்று இருக்கின்றனர். இக் குறையைத் தீர்ப்பது அரசாங்கத்தாரின் முதல் காரிய மாகும். அத்துடன் தொழில் ஆலயங்களில் தொழி லாளிகளாகப்போவதற்கு வேண்டிய பயிற்சியை யளிக் கும் பள்ளிக்கூடங்களும் யதேஷ்டமாக ஸ்தாபனம் செய்யப்படவேண்டும். இவ்விதமே ஜப்பானில் நடை பெறுவதாகத் தெரியவருகிறது.

கல்கத்தாவில் 'ஸெண்டாகம்பெனி' என்ற ஒரு ஜப் பானிய வர்த்தகக் கம்பெனி இருக்கிறது. அதற்குத் தலைவர் ஸெண்டா (Mr. M. Senda) என்பவராவர். அவர் 1934-ம் ௵ அக்டோபர் மாதம் 30-ந் தேதி யன்று, கல்கத்தா ரோடரி கிளப் (Calcutta Rotary Club)யில்* 'ஜப்பான்கைத்தொழில் அபிவிருத்தி' என்ற தலைப்பின்கீழ் ஓர் பிரசங்கம்செய்தார். அந்த சமயத்தில்

---

A General Survey of the factors which have enabled Japan to achieve her present Industrial expansion :—

"...Besides, the vigorous enforcement of Compulsory Elementary Education by the Government has considerably heightened the general standard of the intellect of our workers, making it far easier than before to make them learn the use of, and adapt themselves to modern machinery. There is absolutely no illiterate among our workers and I am convinced that the standard of education of our average worker is higher than that of any average worker in the Western countries.

நம் அரசாங்கத்தார் செய்ய வேண்டியவை.

தொழிலாளிகள் கல்விப்பயிற்சி பெற்றிருப்பதால்தான் அவ்வித அபிவிருத்தியடைய முடிந்ததென்றும் அக்கல்விப்பயிற்சிக்கு அரசாங்கத்தாரின் ஊக்கமும் சிரத்தையுமே முக்கிய காரணங்கள் என்றும் கூறி இருக்கிறார். ஆதலால், அவ்விதமே நம் அரசாங்கத்தாரும் தேசக்கல்வி அபிவிருத்தியில் அதிக சிரத்தை காண்பித்து, ஆரம்பக் கல்வியை எல்லோரும் கற்கும்படி கட்டாயம் செய்தும், கைத்தொழில்களைச் சார்ந்த கல்வி பயில்வதற்குச் சாலைகள் (Technical Institutes) ஏற்படுத்தியும் ஜனங்களுக்கு உதவவேண்டும். முன்னாளில், இருப்புப் பாதைகள் போடவும், நீர்ப்பாசன வசதிகள் ஏற்படுத்தவும், அரசாங்கத்தார்கள் கடன்வாங்கி அவைகளைச் செய்ததுபோல், கல்வி அபிவிருத்திக்கும் இப்பொழுது

---

" Side by side with this, our technical education has also made an enormous stride in recent years under the most effective guidance of the Government, and a large number of technical men with high qualifications has become available. This coupled with improved methods, adopted by our industrialists after many years' investigations and experience for training their workers has made it possible to train our workers within a much shorter time, to a much higher standard than before.

"There is no doubt that our industry employs the most favourable labour amongst the industrial nation of the world and the fact that such an efficient labour is available at moderate cost, places Japanese industry in an unique position for competing in he markets of the world."—The *Hindu*, Nov. 3, 1934, p- 11);

இருக்கும் இந்தியர்களும் இனிபிறக்கும் இந்தியர்களும் அரசாங்கத்தாருக்கு நன்றியறி வுள்ளவர்களாக இருப்பார்கள்.

நிற்க, ஆலைகளில் தொழிலாளிகளை மேற்பார்வையிட்டு நிர்வகிக்கவும் சாஸ்திரப்பயிற்சி தேவையாயுள்ள சிக்கலான வேலைகள் செய்யவும் வேண்டிய உயர்தரப் பயிற்சி அளிப்பதற்குக் காலேஜுகள் ஏற்படுத்தப்பட வேண்டும். மேலும் இக்காலேஜுகளில் சுற்றுப் புறத்திலுள்ள கைத்தொழில்களின் சார்பாக ஆராய்ச்சி நடைபெற வசதிகள் அளிக்க வேண்டும்.

சர்வ கலாசாலைகளில் நம் தேசத்தில் அகப்படும் விளைபொருள்கள், கனிஜப்பொருள்களைப் பற்றித் தீவிர ஆராய்ச்சிகள் நடைபெறவேண்டும். இம் மூலப் பொருள்களிலிருந்து தயாரிக்கப்பட்டுவரும் பொருள்களின் திறத்தை அதிகரிப்பிக்கவும் அவைகளுக்குப் புதிய உபயோகங்கள் கண்டுபிடிக்கவும் ஆராய்ச்சிகள் செய்ய வேண்டும். மேலும் தற்காலத்தில் சர்வகலாசாலைகளில் உயர்தரப் பட்டம் பெற்றவர்களுக்குக்கூட நம் தேசத்தில் கைத்தொழில்களுக்கு உபயோகமா யுள்ள மூலப் பொருள்களைப் பற்றியும், அவைகள் அகப்படும் இடங்களைப்பற்றியும் ஒன்றும் தெரியாமலிருக்கும்பொழுது எவ்விதப்பயிற்சியும் பெறாத பொதுஜனங்கள் எவ்விதம் அறியக் கூடும்? ஆதலால் இந்த சர்வகலாசாலைகள் வாயிலாக நம் தேசத்தில் அகப்படும் மூலப் பொருள்களின்

வளத்தையும் அவைகளைச் சார்ந்த கைத்தொழில்களையும்பற்றிப் பொதுஜனங்கள் அறியுமாறு, தாய்ப் பாஷையில் பல வெளியீடுகள் பிரசுரஞ் செய்யப்பட வேண்டும்.

தவிர, வர்த்தக சம்பந்தமாயுள்ள எல்லாவிதப் பயிற்சியும் பெறுவதற்கு, இந்த சர்வகலாசாலைகளில் வசதிகள் இருக்கவேண்டியது அவசியமாகும். ஜப்பானில் இவ்விதப் பயிற்சி பெறுவதிலேயே மாணுக்கர்கள் முனைந்திருப்பதாகத் தெரியவருகிறது.

நம் தேசத்தில் இப்பொழுது அளிக்கப்பட்டு வரும் கல்வி மாணுக்கர்களுக்கு ஜீவனோபாயவழி காண்பிக்கவில்லை. ஜீவனோபாயத்தை உத்தேசித்து கல்விப்பயிற்சியளிக்கப்படவில்லை யென்றும் மேம்பாடான மனப்பான்மை (Culture) பெறுவதற்கே பயிற்சியளிக்கப்படுகிறதென்றும் சொல்வது அசந்தர்ப்பமாகும். பசிக் கொடுமையால் தவிக்கும் ஒருவனிடமிருந்து மேம்பாடான மனோபாவம் எதிர்பார்ப்பது பெருந்தவறு. ஆதலால் கல்விப் பயிற்சி முறைகளில் உடனே தக்க மாறுதல்களை ஏற்படுத்தவேண்டும். இதனால் சர்வகலாசாலையை அடியோடு எடுத்துவிடவேண்டு மென்பதில்லை. அவைகளின் எண்ணிக்கை இன்னும் பெருக வேண்டும். ஆனால் கற்பிக்கும் விஷயங்களில் மாறுதல்கள் ஏற்படவேண்டும்.

# பாதுகாப்பு.

பலவிதம்.

ஒரு விவசாயி ஒரு தோப்பு நிர்மாணஞ்செய்யும் பொழுது, அவன் பயரிடும் பொருள்களை ஆடுமாடுகள் மேய்ந்து பாழாக்கா வண்ணம் எவ்விதம் வேலி அமைக்கின்றானோ, அவ்விதமே ஸ்தாபிக்கப்பட்ட கைத்தொழில்களை அயல் நாட்டுப் போட்டிகளிலிருந்து காப்பாற்றுவதற்குத் தக்க பாதுகாப்பு அரசாங்கத்தார் ஏற்படுத்தவேண்டும். பாதுகாப்பு (Protection) அளிப்பதில் பல முறைகள் உண்டு. இறக்குமதியாகும் ஸாமான்களில், நாட்டில் தயாரிக்கப்பட்ட ஸாமான்களுடன் போட்டி போடக்கூடியவைகளுக்கு உயர்ந்த இறக்குமதி வரி (Import duty) போடுவது முதலாவதாகும். ஒரு தொழில் நடத்துவதில் நஷ்டம் வந்தால் அதை ஈடுசெய்வதாக ஒத்துக்கொள்வது வேறு ஒரு முறையாகும். உற்பத்தி செய்வதை அபிவிருத்தி செய்வதற்காக, உற்பத்தி ஸாமான்களின் அளவுக்குத் தக்கவாறு பொருளுதவி செய்வது மூன்றாவது வழியாகும். அரசாங்கத்திற்குத் தேவையான பொருள்களனைத்தும் அயல் நாடுகளிலிருந்து குறைந்த விலைக்குக் கிடைத்தபோதிலும், இந்த நாட்டிலேயே செய்யப்பட்ட பொருள்களையே வாங்குவது மற்றுமொரு வகையில் பாதுகாப்பு அளிப்பதாகும்.

கைத்தொழில் முறைகளில் அதிகப் பயிற்சி பெற்று, யதேச்சா வியாபாரத்தை (Free trade) கைக்கொண்டிருந்த கிரேட் பிரிட்டன் தற்காலத்தில் அயல் நாட்டுப் போட்டிகளிலிருந்து சமாளிக்க முடியாமல்

பிரிட்டன்.

அதிகமாகப் பாதிக்கப்பட்டு, அதை நீக்க அதிகமான பாதுகாப்பு முறைகளைக் கையாளுவதென்றால், அவ்விதப் பயிற்சியே இல்லாத இந்தியாவுக்குப் பாதுகாப்பு எவ்வளவு அவசியம்? தக்க நிர்வாகத்திற்குப் பின் பாதுகாப்பு முறைகளே ஒரு தேசத்தின் கைத்தொழில் அபிவிருத்திக்குக் காரணமாகும். பாதுகாப்பின்றி ஒரு நாளும் நிலைத்து நிற்கமுடியாத இருகைத்தொழில்களுக்கு கிரேட் பிரிட்டன் பாதுகாப்பு அளித்து வருகிறது. முதலாவது, சென்ற ஐரோப்பிய யுத்தத்திற்குமுன் ஜெர்மனியிலிருந்தே எல்லா நாடுகளும் அவரவர்களுக்குத் தேவையான சாயப் பொருள்களை (Dyes) வாங்கிக் கொண்டிருந்தார்கள்; யுத்தம் ஆரம்பித்தவுடனே ஜெர்மனியிலிருந்து அப்பொருள்கள் வராமையினால் வேண்டிய சாயங்கள் இல்லாமல் தவித்தார்கள். அந்நிலையில் பிரிட்டனிலும் அரசாங்கத்தாரின் உதவியைக் கொண்டு சில கம்பெனிகளில் சாயம் தயாரிக்க ஆரம்பித்தார்கள். யுத்தத்திற்குப் பின் ஜெர்மனியிலிருந்து குறைந்த விலைக்குச் சாயம் தயாரிக்க ஆரம்பித்தார்கள். யுத்தத்திற்குப் பின் ஜெர்மனியிலிருந்து குறைந்த விலைக்குச் சாயம் கிடைத்த போதிலும், அவைகள் நாட்டிற்குள் வருவதற்குத் தடையேற்படுத்தி; அவசியமாகத் தருவிக்கவேண்டிய

சாயங்களை லைசன்ஸ் பெற்றவர்கள் மூலம் கிடைக்கும் படி செய்துவிட்டனர். இவ்விதமாகப் பிரிட்டிஷார் அயல் நாட்டின் போட்டியிலிருந்து தங்கள் தேசியத் தொழிலைக் காப்பாற்றிக்கொண் டிருக்கின்றனர்.

இரண்டாவது, சமீபத்தில் நிலக்கரியிலிருந்து பெட்ரோல் தயாரிக்க ஒரு முறை கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. பிரிட்டனில் நிலக்கரி ஏராளமாக அகப்படுகிறது. தற்காலத்தில் பல சௌகரியங்களை உத்தேசித்து, மின் சாரமும் டீசல் என்ஜின்களும் வெகுவாகக் கையாளப் பட்டு வருவதால், நிலக்கரிக்குக் கிராக்கி குன்றி விட்டது. ஆதலால் நிலக்கரிச் சுரங்கங்களின் சொந்தக்காரர்கள் பலத்த நஷ்டத்திற்கு உட்பட்டிருக்கின்றனர். இவர்களின் குறையைத் தீர்ப்பதற்காகவும், மண்ணெண்ணெய்களுக்கு (Petroleum products) அயல் நாடுகளின் உதவியை எதிர்பார்ப்பதைக் குறைப்பதற்கும், பிரிட்டிஷ் உற்பத்திக்காரர்கள், மேலே கூறிய நிலக்கரியின் புதிய உபயோகத்தை ஆதாரமாகக் கொண்டு, பிரிட்டனில் நிலக்கரியிலிருந்து பெட்ரோல் தயாரிக்க ஓர் ஆலை நிர்மாணம் செய்திருக்கின்றனர். இப்பொழுது நியமனம் செய்யப்பட்டிருக்கும் ஆலையில் பிரிட்டனுக்குத் தேவையாயுள்ள பெட்ரோல் முழுவதும் தயாரிக்க முடியாது. அன்றியும் தற்சமயம் இயற்கை நிலையில் கிடைக்கும் பெட்ரோலின் விலையைக்காட்டிலும் செயற்கை (Synthetic) பெட்ரோலின் விலை அதிகமாகவே இருக்கிறது. ஒருபொழுதும் இயற்கையிலகப்படும் பெட்ரோலுடன் செயற்கைப் பெட்ரோல் போட்டியிடவே முடியாது. இப்படியிருந்தும் இக்

கைத்தொழிலுக்குப் பாதுகாப்பு அளிப்பதற்காக, ஆலையில் உற்பத்தி செய்யப்படும் பெட்ரோலின் விலைக்குச் சமமாகும்படி இறக்குமதியாகும் பெட்ரோலுக்கு வரி விதித்து, இக்கைத்தொழிலுக்கு பிரிட்டிஷ் கவர்மென்டார் ஆதரவு அளித்திருக்கின்றனர்.

இதர வழிகளிலும் அரசாங்கத்தார் ஏற்கெனவே ஸ்தாபனம் செய்யப்பட்ட கைத்தொழில்களுக்கு உதவியளிக்கக்கூடும். இக் கைத்தொழில்கள் அயல் நாட்டுப் போட்டிகளிலிருந்து பாதிக்கப்படாமல் இருப்பதற்காக (சற்றேறக்குறைய கூட்டாளிகள் போல்) யதேஷ்டமாகத் திரவிய சகாயம் செய்வது ஒரு மார்க்கமாகும். உதாரணமாக, பிரிட்டனின் கப்பல் தொழில் (Shipping Industry) இதர நாட்டுப் போட்டியினால் சீர் கேடான நிலையை அடைய அரசாங்கத்தார்களே ஏராளமான பொருளுதவிசெய்து, அச்சீர்கேடான நிலையை மாற்றமுன்வந்திருக்கின்றனர். பிரிட்டனி லன்றி, இதர தேசங்களிலும் அரசாங்கத்தார் கைத்தொழில்களுக்கு ஆதரவு அளிக்கின்றனர். இக்கப்பல் கைத்தொழிலையே உதாரணமாக எடுத்துக் கொள்வோமாயின், 1933-ம் வருஷத்தில் ஜப்பான், பிரான்ஸ், இட்டாலி, ஐக்கிய அமெரிக்கா என்பவற்றின் கவர்மென்டார்கள் முறையே, 9,759,965 ; 21,317,639 ; 37,381,204 ; 56,774,866 யென்கள் (ஜப்பான் நாணயம்) உபகார நிதி (Subsidy) யாகக் கொடுத்திருக்கின்றனர். (Mr. Senda's Address in the Rotary Club

Calcutta, *The Hindu*, November 3, 1934.) எல்லா நாடுகளிலும், கைத்தொழில்களுக்கு இவ்வித ஆதரவு அளிக்கப்படுவதாக இருக்கின்றது. இங்கு அது மிகக் குறைவு.

ஆகையால், இந்திய கைத்தொழில்களுக்கு அரசாங்கத்தார் இன்னும் அதிக ஆதரவு அளிக்கவேண்டும்.
கைத்தொழில்களுக்குப் போது
இந்தியா மானவரை பாதுகாப்பு வரிகள்
இருப்பதில்லை. உள்ள வரியோ
நீடித்த காலமும் இருப்பதில்லை. இவ்விரண்டு பிரதிபந்தங்களோடும் உற்பத்தியாகும் பொருள்கள்மீது சுங்கவரிகளும் விதித்திருக்கின்றனர். நெருப்புப் பெட்டி, சர்க்கரை, எஃகு இவைகளின் மீது விதித்து இருக்கும் சுங்கவரி மேல் எடுத்துக்காட்டியதை நிரூபிக்கும்.

இந்நிலையில் தனிகர்கள் கைத்தொழில்களில் இறங்குவதற்கு அஞ்சுகின்றனர். அயல் நாடுகளில் சிலவற்றில் (உதாரணமாக ஜப்பானில்) அரசாங்கத்தார்களே கைத்தொழில்களை ஆரம்பித்து அவ்விதக் கைத்தொழில்களை நடத்துவதால் திண்ணமாக லாபம் கிடைக்குமென்று நிரூபித்துப் பின்பு அவைகளை ஜனங்களால் ஸ்தாபனம் செய்யப்பட்ட கம்பெனிகளின் நிர்வாகத்திற்கு விட்டு, அவர்களுக்குத் தேவையான வசதிகள் அனைத்தும் அளித்து, கைத்தொழில்களை அபிவிருத்திக்குக் கொண்டு வந்திருக்கின்றனர்.

சென்ற சில வருஷங்களாக அரசாங்கத்தார் தேசத்திலுள்ள கைத்தொழில்களில் எவைகளுக்குப் பாதுகாப்பு

அளிக்கவேண்டுமென்பதை நிர்ணயிக்கும் பொருட்டு டாரிப் போர்டு (Tariff Board) என்ற ஒரு சபை ஏற்படுத்தி யிருக்கின்றனர். இந்தச் சபை பாதுகாப்பைக் கோரும் கைத்தொழிலின் சம்பந்தமாயுள்ள விஷயங்களைத் திரட்டிப் பரிசிலனை செய்து, தன் சிபார்சுகளை அரசாங்கத்தாருக்கு அனுப்பும். அரசாங்கத்தார் அச்சபையின் சிபார்சுப்படி நடக்கக் கடமைப்பட்டவர்கள் அல்ல. அநேகமாக ஒருவாறு சிபார்சுப்படியும் நடப்பதுண்டு. ஆனால் சபை சிபார்சுசெய்து, அதற்குத் தக்கவாறு அரசாங்கத்தார் நடவடிக்கை எடுத்துக்கொள்ளு முன், அக்கைத்தொழிலுக்குப் பாதுகாப்பு அளிப்பது வீணே என்று நினைக்கும்படியாகக் குற்றுயிரான அபாய நிலைக்குவந்துவிடும். நெருக்கடியான நிலையிலிருக்கும் ஒரு வியாதியஸ்தனுக்கு மருந்து கொடுப்பதென்றால், வியாதியின் விகாரமான குணங்களை உடனே தீர்ப்பதற்கு ஒரு மருந்தும், தேக நிலையில் வேரூன்றியுள்ள கெடுதல்களைப் போக்க மற்றொரு மருந்தும் கொடுப்பது அவசியமாகும். அவ்விதமின்றி, வியாதியஸ்தன் உயிருக்கு மன்றாடும் சமயத்தில், வியாதியின் ஆரம்பத்தைப் பற்றி விவாதம் செய்துகொண்டிருப்பது ஒரு வைத்தியனுடையகெட்டிக்காரத்தனத்தைக் காண்பிக்காது. பிரிட்டன், பிரான்ஸ், ஜெர்மனி, இட்டாலி போன்ற தேசங்களில் இறக்குமதி வரிகளை அந்தந்த தேசங்களின் கைத்தொழில்களின் நிலைக்குத்தக்கவாறு விதித்துப் பல வேறு உபாயங்களைக் கையாளுவது போலவே நம் தேசத்திலும் அரசாங்கத்தார் செய்து, கைத்தொழில்களை அபிவிருத்தி அடையச் செய்யவேண்டும்.

## போக்கு வரவு சாதனங்கள்.

மூலப்பொருள்கள் கிடைக்கும் இடங்களிலேயே தொழில் ஆலைகளை ஸ்தாபனம் செய்வது விசேஷம். ஆனால் மற்றொரு இடத்தில் கூறிய படி இதர வசதிகளை உத்தேசித்து வேறு இடங்களிலும் ஆலைகளை ஸ்தாபனம் செய்ய வேண்டிவரும். ஆலைகளில் உற்பத்தியாகும் ஸாமான்களை அவைகள் தேவையாயுள்ள இடங்களுக்கு அனுப்புவதற்கும் மூலப்பொருள்களை ஆலைகளுக்குக் கொண்டு வருவதற்கும் போக்குவரவு சாதனங்கள் இன்றியமையாதன வாகும். ஆதலால் கைத் தொழில்களின் அபிவிருத்திக்குப் போக்குவரவு சாதனம் உயிர் நிலை போலாகும்.

இருப்புப் பாதையும் வண்டிப் பாதையும்.

தற்காலத்தில் பொருள்கள் அனைத்தும் ஓரிடத்திலிருந்து மற்றொரு இடத்திற்கு ரயில் மோட்டார் மூலமாயும் கப்பல்கள் மூலமாயும் எடுத்துக்கொண்டு போகப்படுகின்றன. கூடிய சீக்கிரத்தில் ஆகாய விமானங்களும் இவைகளுடன் போட்டியிடும்.

முக்கியமாக ரோடுகளின் அமைப்பினால் மோட்டார்கள் அதிகமாக ஓட உலகமெங்கும் ரயில்வே கம்பெனிகளுக்கு அதிக நஷ்டம் ஏற்பட்டிருப்பதாகத் தெரியவருகிறது. போக்குவரவு சாதனங்களைக் குறிக்கும் படத்தைக் கவனித்தால், நம் தேசத்தில் அமைக்கப்பட்டிருக்கும் வண்டிப்பாதைகளும் இருப்புப்பாதைகளும் ஒன்றோடொன்று ஒட்டியே ஓடுவதைக் கவனிக்கலாம்.

அதனால் போட்டி ஏற்படுவது சகஜமே. இனி ஏற்படுத்தப் பெறும் இருப்புப்பாதைகளை இவ்விதம் அமைக்காமல், உள் நாட்டு வர்த்தகத்தை அபிவிருத்தி செய்யக்கூடிய பாதைகளை நன்கு செப்பனிட்டு வைத்தால், மோட்டார் சொந்தக்காரர்களும், ரயில்வே கம்பெனிகளும் ஒத்துழைத்து இருவரும் சுபிக்ஷ நிலையை அடையலாம். இப்பொழுது மத்திய கவர்மெண்டார் இம் முறையில் வேண்டிய சீர்திருத்தம் செய்ய முன் வந்திருக்கின்றனர்.

தற்காலத்தில் ரயில்வே கட்டணங்கள் (Railway Freight) உள் நாட்டு வர்த்தகத்திற்கு இடையூறாக இருக்கிறதென்றும், இயற்கை நிலையிலிருக்கும் ஸாமான்களை ஏற்றுமதி செய்வதற்கே வசதி கொடுக்கிறதென்றும் வர்த்தகர்கள் கூறுகின்றனர். இவ்வித கஷ்டங்களை நிவர்த்திப்பதற்கு அரசாங்கத்தாரே பொறுப்பாளியாவார்கள்.

ஜலமார்க்கம்

இனி ஜலமார்க்கமாகவே ஸாமான்களைக்கொண்டு போவது லாபகரமானது. அயல் நாடுகளில் தேவையான வசதிகள் இருக்கும்பொழுதும், இவ்வித லாபத்தை உத்தேசித்து, பெரிய பெரிய கால்வாய்கள் வெட்டியிருக்கின்றனர். நம் தேசத்திலும் இவ்விதம் ஆறுகளை உபயோகப்படுத்துவதைப்பற்றிக் கவனம் செலுத்தவேண்டும்.

நம் தேசத்தைச் சூழ்ந்திருக்கும் சமுத்திரங்களில் ஓடும் கப்பல்களில் ஒரு சிறு பகுதியே நம் தேசத்தவர்களுக்குச் சொந்தமானவை. தேச மூலதனத்தைக்

கொண்டு ஸ்தாபிக்கப்பட்ட கப்பல் கம்பெனிகள் அயல் தேசக் கம்பெனிகளுடன் போட்டியிட முடியாமல் சோர்வடைந்து விடுகின்றன. முன் காலத்தில் நம் தேசத்தில் கப்பல் தொழில் இருந்த நிலையையும் தற் காலத்தில் இருக்கும் நிலையையும் கவனிக்க சந்தோஷத் திற்கு இடமே இல்லை. வருஷமொன்றுக்குப் பல கோடிக் கணக்கான ரூபாய்களுக்கு ஸாமான்கள் இறக்குமதி ஏற்றுமதி செய்யப்பட்டபோதிலும் இந்தி யாவில் கப்பல் தொழில் (Shipping Industry) கிடையாது. ஜப்பான், கிரேட் பிரிட்டன், பிரான்ஸ், அமெரிக்கா போன்ற நாடுகளில் அவ்வத்தேசக் கப்பல் களே ஆங்காங்கு உற்பத்தியாகும் பொருள்களை அயல் நாடுகளுக்கு எடுத்துச் சென்றும், தங்கள் தேசத்திற்கு வேண்டிய ஸாமான்களை அயல் நாடுகளிலிருந்து நிரப்பிக்கொண்டும் போகின்றன. இந்நிலைமையில் நம் தேசத்தவர்கள் கப்பலோட்டும் திறமையும் இழந்து; சமுத்திரப் பிரயாணத்தின் அனுபவமும் அற்றவர்க ளாய்விடுகின்றனர். சகஜமாகக் கப்பலோட்டவும் கப் பல்களில் வேலைசெய்யவும் கப்பல் கட்டுவிக்கவும் கப் பல்களுக்குத் தேவையான யந்திரங்களைத் தயாரிக்க வும் போதிய வன்மை, உழைப்பு, முயற்சியுள்ளவர்க ளும் இவ்விதக் கைத்தொழில்களில் முன்னிற்காமல் விவசாயத்திலேயே இறங்குகின்றனர். ஆதலால் இந்தி யாவில் இறக்குமதியாகும் ஸாமான்களும் ஏற்றுமதி யாகும் ஸாமான்களும் இந்தியக் கப்பல்களைக் கொண்டே நடைபெறுமாறு அரசாங்கத்தார் ஏற்பாடு செய்வது அவசியமாகும். நம் தேசத்துக் கடற்கரை

போக்குவரத்தனைத்தும் தேசியக் கப்பல்களாலேயே நடைபெறச்செய்வது தக்க ஆரம்பமாகும். நாளடைவில், அயல்தேசங்களுக்கும் இந்தியக் கப்பல்கள் செல்லும். சமீபத்தில் நம் தேசத்தவர்கள் மாலுமிகளாகப் பயிற்சி பெறுவதற்கு வேண்டிய வசதிகள் அரசாங்கத்தார்கள் ஏற்படுத்தியுள்ளார்கள். இன்னும் மேன்மேலும் அதிக வசதிகள் ஏற்படுத்தி, இந்தியக் கப்பல் தொழிலை அபிவிருத்தி செய்யவேண்டியவர்கள் அரசாங்கத்தாரே யாவர்.

பல துறைகளில் அரசாங்கத்தார்களே முன்வந்து தேசியக் கைத்தொழில்களை ஆதரித்து அபிவிருத்திக்குக் கொண்டுவரவேண்டும்.

தொழில் இல்லாமையும் அரசாங்கத்தாரும்.

'தொழில் இல்லாமை' என்னும் பிரச்னையைத் தீர்ப்பது அரசாங்கத்தார் கடமையேயாகும். ஜனங்களே இந்நிலையைத் தீர்த்துக்கொள்வது அசாத்தியம். தொழில் இல்லாமை என்னும் வியாதியை நிவர்த்திப்பதற்குக் கைத்தொழிலை அபிவிருத்தி செய்வதே தக்க ஔஷதம் என்று அயல் நாட்டார் அறிந்து, அம்முறையைக் கைக்கொண்டிருக்கின்றனர். தேசத்தில் கைத்தொழில் அபிவிருத்திக்குப் போதிய தனம் இல்லாவிடில், கடன் வாங்கியோ அல்லது வரிகள் விதித்தோ அல்லது உத்தியோகஸ்தர்களின் சம்பளங்களைக் குறைத்தோ அல்லது இதர வழிகளில் சிக்கனங்கள் செய்தோ ஒவ்வொரு மாகாணத்தின் இயற்கை வளத்துக்குத் தக்கவாறு திட்டமிட்டுக் கைத்தொழில்களை ஸ்தாபித்து,

தக்க பாதுகாப்புகள் அமைத்து, தேசத்தைச் செழித்தோங்கச்செய்வது அரசாங்கத்தார் கடமையாகும். முன்னொருகால் நம் தேசம் கைத்தொழில்களில் முதன்மை ஸ்தானம் பெற்றிருந்ததையும் அயல் நாடுகளின் ஆலைப் பொருள்களின் போட்டியினாலேயே கைத்தொழில்கள் குன்றி ஜனங்கள் வறியவர்களானதையும், அந்நிலையை அக்காலத்தில் ராஜ்யபாரம் நடத்தியவர்கள் தடுக்காமல் இருந்ததையும் குறிப்பாகச் சில வருஷங்களுக்கு முன் இந்தியா கவர்மென்டிற்குப் பொக்கிஷ மந்திரியாக இருந்த ஸர் பேஸில் ப்ளாக்கெட் (Sir Basil Blackett) 1930-ம் வருஷம் ஜனவரி மாதம் 10-ந் தேதி ராயல் ஸொஸைட்டி ஆப் ஆர்ட்ஸ் (Royal Society of Arts) என்ற சங்கத்தில் பிரசங்கம் செய்தபொழுது கூறியிருக்கின்றனர்.* அக்காலத்தில் அரசாங்கத்தார் சரியான பொருளாதார வழிகளில் பிரவர்த்திக்காமல் தங்கள் கவனத்தைச் சட்டங்களையும் அமைதியையும் நிலை நாட்டுவதிலேயே திருப்பி அதற்குத் தேவையாயுள்ள வரிகளை மட்டும் விதித்து வந்ததாகவும் கூறியிருக்கின்றார்.

*" The effect of the West on India, and in particular the reaction upon India, of the industrial revolution in Great Britain and the consequent influx of machine-made goods, had during the nineteenth century seriously impaired the village economy of India and had reduced the output and value to India of many of the indigenous manufactures previously exported, for which India was famous......The Indian Government was dominated by the ideas of the Manchester School, and restricted its intention in econonic spheres and its taxation to the minimum needful to maintain law and order,"—Sir M. VISWESWARAYA *Industrializing India*, PP, 61-62.

இப்பொழுதிருக்கும் கவர்மென்டார் அவ்விதம் செய்யாமல், தேசத்தின் முன்னேற்றத்தையே மனதிற் கொண்டு கைத்தொழில் அபிவிருத்தியில் தீவிரமாக இறங்கி, தேசத்திலிருந்து வறுமையை நீக்கி, சுபிக்ஷத்தை நிலை நாட்ட வேண்டுவது அவசியம்.

பிரிட்டனும் இந்தியாவும்.

இந்தியர்களுக்கும் பிரிட்டிஷார்களுக்கும் வெகுகாலமாக உள்ள நெருங்கிய சம்பந்தத்தினால் இருவரும் நன்மையை அடையலாம். இந்தியா சுபிக்ஷமாயிருப்பின், பிரிட்டிஷார்களுக்கும் சுபிக்ஷம் ஏற்படும். இந்தியாவின் சுபிக்ஷத்தை நாடுவதால் பிரிட்டிஷர் தங்கள் சுகத்தை நாடிக்கொண்டவராவார். ஆதலால் நம் இந்திய கவர்மென்டார், தேசியக் கைத்தொழில்களில் முனைந்து இறங்குவதால், இந்தியர்களுக்கும் பிரிட்டிஷார்களுக்கும் சௌகர்யமென்று அறிந்து அவ்விதம் செய்வார்களானால் இருதேசத்தவர்களும் சௌகர்யமடைவதுடன், பூலோகமே க்ஷேமத்தையடையும்.*

சுபம்.

* "I cannot conclude this note better than by endorsing the following generous and wise word of Sir Frederick Nicholson :—

"I beg to record my opinion that in the matter of Indian Industries, we are bound to consider Indian Industries firstly, secondly and thirdly. I mean by firstly that local raw products should be utilized, by secondly that industries should be introduced and by thirdly that profits of such industry should remain in the country.

"If measures are taken, in this spirit, India will become prosperous and strong and England more prosporous and stronger." (PANDIT MADAN MOHAN MALAVIYA—Industrial Commission Report)

# அபிப்பிராயங்கள்.

மகா மகோபாத்தியாய தாக்ஷிணாத்ய கலாநிதி டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்களின் அபிப்ராயம்:—

"ஊரெங்கும், நாடெங்கும், உலகெங்கும எல்லாருடைய கவனத்தையும் பெரும்பாலும் இப்போது இழுத்து வருவது பொருளாதாரத்தின் நெருக்கடியான நிலை. நம் நாட்டில் ஆயிரக்கணக்கான ரூபாயைச் செலவிட்டுப் படித்தவர்கள் வேலையில்லாமல் திண்டாடுவதும் விவசாயிகள் சுகவாழ்வில்லாமல் வருந்துவதும், பசிப்பிணியால் தவிக்கும் ஜனங்கள் எங்கே பார்த்தாலும் காணப்படுவதும் தேசத்தின் பரிதாபகரமான நிலையை நன்கு தெரிவிக்கின்றன. பஞ்சத்துக்கு உரிய சின்னங்கள் அங்கங்கே நடமாடுகின்றன. இவற்றைப் போக்குவதற்கு உரிய வழிகள் யாவை என்பதே பல மேதாவிகளுடைய முழுநோக்கமாக வுள்ளது. எல்லா விஷயங்களையும் நன்கு உணர்ந்த மகா நிபுணர்கள் தங்கள் தங்கள் அனுபவத்தால் இவை சம்பந்தமாக அரிய பல நுட்பமான விஷயங்களைப் பெரிய சபைகளில் உபந்நியாசம் செய்தும், பத்திரிகைகளுக்கு எழுதியும், புத்தகங்கள் எழுதியும் வெளியிட்டிருக்கிறார்கள். இப்போது பெங்களூர் ஸென்டு ஜோஸப்ஸ் காலேஜ் ஆசிரியராகிய ஸ்ரீமான் S. ராமசந்திர ஐயரவர்கள், எம்.ஏ., தமிழில் எழுதி வெளியிட்டுள்ள "இந்தியக்கைத்தொழில் முன்னேற்றம்." என்னும் அருமையான நூல் தக்க சமயத்தில் ஒரு சிறந்த சாதனமாகக் கருதப்படும் நிலைமையில் அமைந்துள்ளது.

இந்தியாவில் விளையும் பொருள்கள் யாவை? அவை முன்பு என்ன என்ன விதங்களில் உபயோகப்பட்டு வந்தன? இப்போது எப்படி உபயோகிக்கப் பெற்று வருகின்றன? முன்பு சுபிக்ஷமாக இருந்த தேசத்திற்கு இப்போது வறுமை ஏற்பட்ட காரணம் என்ன? கைத் தொழில்களால் மற்ற நாடுகள் செழித்தோங்க இந்தியா மட்டும் ஏன் தாழ்ந்த நிலையில் இருக்கவேண்டும்? கைத் தொழில்களை என்ன என்ன முறையில்விருத்தி செய்ய லாம்? என்பன போன்ற உயர்ந்த கருத்துக்களைப் பல பெரியோர்களுடைய அபிப்பிராயங்களை அடிப்படை யாகக் கொண்டு புள்ளி விவரங்களுடன் மிக அழகாக வும் தெளிவாகவும் இந்நூல் தெரிவிக்கின்றது.

இந்த மாதிரியான விஷயங்களைத் தமிழில் யாவரும் தெரிந்துகொள்ளும்படி நல்ல நடையில் எழுதியிருப்பது மிகவும் கொண்டாடத்தக்கது. எனக்கு ஏட்டுப்புத்தகங் கள் தேடும் விஷயத்தில் மகோபகாரியாக விளங்கிய ஸ்ரீ சீதாராமய்யரவர்களுடைய புத்திரராகிய இவர் இப் புத்தகத்தை எழுதியிருப்பதை நோக்குகையில் எனக்கு உண்டாகும் சந்தோஷத்துக்கு அளவேயில்லை. இத் தகைய நூல்கள் பல இப்போது வெளிவரவேண்டுவது மிக இன்றியமையாதது. இந்தியர் ஒவ்வொருவர் கையி லும் இருக்கவேண்டிய புத்தகம் இது. ஆதலின் பொதுமக்களும் கலாசாலை மாணாக்கர்களும் இதனை வாங்கிப் படித்தால் விசேஷமான பயனையடைவார்க ளென்பது என் அபிப்பிராயம்.''

"கலைமகள்" அபிப்பிராயம்:—(தாதுவருஷ ஆடிமீ)

"இந்த இந்தியாவில் வேலையில்லாத் திண்டாட்டத்திற்குக் காரணம், கைத்தொழில் விருத்தியின் அவசியம், முதலியவற்றை விளக்கிக்கூறும் நூல். முன்காலத்தில் எவ்வாறு இருந்தபோதிலும், இன்று தான் இஷ்டப்பட்டாலும், படாவிட்டாலும், இந்தியா உலக நிகழ்ச்சிகளை விட்டு விலகி நிற்பது இயலாது. இந்தியர் தனி வாழ்வு நடத்துவது என்பது பொருளில்லாப் பேச்சு. உலகத்திலுள்ள வேறெல்லா நாடுகளிலும் கைத்தொழில் அபிவிருத்தி வெகு ஜாக்கிரதையாகக் கவனிக்கப்பட்டு வருகிறது. ஆகவே காலத்திற்கேற்ப நாமும் விவசாயத்தில் ஈடுபடுபவர்களின் எண்ணிக்கையைக் குறைத்தும் கைத்தொழில்களை மேம்படுத்தியும் வருவது நமக்கு இன்றியமையாதது. இதை புள்ளி விவரங்களோடு எடுத்துரைத்து, கிராமக் கைத்தொழில், மத்தியதரக் கைத்தொழில், பெருங்கைத்தொழில்—இவற்றைப் பொருள் இடம் ஏவலுக்குத் தக்கபடி அமைத்து நடத்துவதற்கான யோசனைகள் ஆசிரியர் கூறியிருக்கிறார். இது விஷயத்தில் ஜனங்களுடைய கடமையையும், அரசாங்கத்தார் புரியவேண்டிய உதவிகளையும் எடுத்துக் காட்டியிருக்கிறார். இம்மாதிரி புத்தகங்கள் வேறு பாஷைகளில் இருந்தாலும் தமிழில் அருமையே. ஆகையால் இவ்விஷயங்களை இதுவரை நன்கு அறிந்து கொள்ளாத தமிழரனைவரும் சிரத்தையுடன் படிக்க வேண்டிய புத்தகம் இது. பள்ளிக்கூடங்களில் மத்தியதர வகுப்புக்களுக்குப் பாடமாகவைத்தால் மாணவர்கள் உபயோகமும் ரஸமுமுள்ள பலவிஷயங்களைத் தெரிந்து கொள்ள ஏதுவாகும்————"

